காதலுடன் கருத்து மிகுந்த கதையும்......
விந்தை விநோதங்களும் வீரச்செயல்களும்..
தெள்ளிய வசனமும் தெவிட்டாத ஹாஸ்யமும்.
ஒருங்கே அமையப்பெற்ற அருமையான படம்

# ஜூபிடரின்

# மோஹினி

டி. எஸ். பாலையா
எம். ஜி. ராமச்சந்தர்
ஆர். பாலசுப்ரமணியம்
புளிமூட்டை ராமசாமி
எம். என். நம்பியார்

வி. என். ஜானகி
மாதுரி தேவி
எம். எஸ். எஸ். பாக்கியம்
ஆர். மாலதி
கே. [illegible]

நடனங்கள் - லலிதா - பத்மினி





...விரைவில் வெளிவருகிறது.....

# நரம்புச் சோர்வு உங்கள் ஆரோக்கியத்தையும் சந்தோஷத்தையும் கெடுக்கும்படி விடாதீர்கள்.



உங்கள் நரம்புகள் சோர்வடைந்து உங்களை மனமுடைந்தும் வெகு வெடுப்பாகவும் சந்தோஷமில்லாமலும் இருக்கும்படி செய்யும் பொழுது, நரம்புகளுக்கு போஷாக்கு கொடுத்து தேற்றி சமனமூட்டும் ஆகாரத்தை உட்கொள்ள மறந்தும் தாமதம் செய்யாதீர்கள்.

நரம்புகளுக்கு போஷாக்கு கொடுக்க மிக அம் ருசியுள்ள ஒரு கோப்பை "ஓவல்டின்" தவறாமல் ஒழுங்காக அருந்துங்கள். அது உங்கள் நரம்புகளுக்கு சமனமூட்டவும் மற்றும் தேகத்துக்கும் மூளைக்கும் ஆரோக்கியம் கொடுக்கவும் வேண்டிய உணவு சத்துக்களை அளிக்கிறது. ஓவல்டின், முத்த பார்லி மால்ட், புதிய முட்டை கூடிய பசுவின் பால் இவற்றுடன் கோக்கோ, இயற்கை விட்டமின்களும் மற்றும் தேக ஆரோக்கியத்துக்கும் தெம்புக்கும் அவசியமான இதர உணவு சத்துக்களும் சேர்த்து தயாரிக்கப்பட்ட பரிபூர்ண உணவு.




OV/100

[illegible]

# ‘ஓவல்டின்’

OVALTINE பலவிருத்தி ஆகார பானம்

டிஸ்ட்ரிப்யூட்டர்கள் :

கிரஹாம்ஸ் டிரேடிங் கம்பெனி (இந்தியா) லிமிடெட்., தபால்பெட்டி நெ. 1205, மதராஸ்; மற்றும் பம்பாய், காராச்சி, கல்கத்தாவிலும்; தி இங்கிலீஷ் ஸ்காட்டிஷ் ஜாயிண்ட் கோவாபரேடிவ் ஹோல்சேல் சொஸைட்டி லிமிடெட்., கள்ளிக்கோட்டை (மலபார் கோஸ்டுக்கு)

## தீபாவளிப் பரிசுப் பொருட்கள்

உயர்தர ஸ்விஸ் ரிஸ்ட் வாட்சுகள் - 100 டிசைன்கள்

•

| | |
|---|---|
| ரோலக்ஸ் | ரோமர் |
| மெடோரினு | ஓரிஸ் |
| சைமா | டெல் |
| அரிஸ்டாக்ஸ் | எடோனியா |
| ரெக்கார்டு | பியர்ஸ் |
| மினிஸ்டர் | ஸில்வானு |
| எவிடா | ஹெர்குலீஸ் |

லோவர் பிரைமா

பலவித வால் கிளாக்குகள், டைம்பீஸ்கள், இன்னும் பல.

ரேடியோக்கள்
6, 5 வால்வு செட்டுகள்
ஜி. இ.
ஆர். ஸி. ஏ.
இன்விக்டா

•

பவுண்டன் பேனுக்கள்
பார்க்கர், ஷீபர்ஸ்,
எவர்ஷார்ப், ராஜா,
ஸ்கேட்டர், அல்டுரா,
ஒலிம்பிக், பிரெஞ்சு ஸில்வர்
முதலியன

எல்லா விலைகளும் குறைக்கப்பட்டுள்ளன

**அஜந்தா ஆர்ட் & கமர்ஷியல் ஏஜன்ஸீஸ்**

159, மேலவீதி : சிதம்பரம்

## தீபாவளி விற்பனை

கொள்ளேகாலப் பட்டுச் சேலைகள்

•

★ உயர்ந்த பட்டு

★ சிறந்த நெசவு

★ அழகான வேலைப்பாடுகள்

★ கெட்டிச் சாயம்

•

பல உயர்ந்த பட்டுச் சேலைகளும், பல ரவிக்கை துணிகளும் ஏராளமாய் வந்துள்ளன.

இன்றே வந்து பாருங்கள் !

•

மஹாலக்ஷ்மி ஸ்டோர்ஸ்

பிம்டிவாலா பில்டிங்ஸ்
லகம்ஸி நாப்பு ரோடு
மாதுங்கா G. I. P. :: பம்பாய் - 19

தலைமை ஆபீஸ் :

**மஹாலக்ஷ்மி ஸ்டோர்ஸ்**

[ போன் : 88041 ]

பாண்டிபஜார் :: தியாகராயநகர்

# கல்கி

## பொருளடக்கம்

மலர் 8 } இதழ் 12 } அக்டோபர் 17 { சர்வதாரி ௵ { ஐப்பசி 1





ஆயிரம் வருஷங்களுக்கு முன்பு தமிழ் வளர்த்த ஔவைப் பாட்டியின் கதையைக் கடந்த ஐந்து வாரங்களாகச் சென்னை ஒற்றைவாடைத் தியேட்டரில் ஸ்ரீ டி. கே. எஸ். சகோதரர்கள் நாடகமாக நடத்தித் தமிழ்க் கலையை வளர்த்து வருகிறார்கள். மேற்படி நாடகத்தின் சில காட்சிகளை நமது சைத்திரிகர் ஓவியக் கண்கொண்டு பார்த்துத் தீட்டியதை இந்த இதழ் அட்டை அலங்கரிக்கிறது.

ஔவையார் நாடகம் ஆரம்பத்திலிருந்து கடைசிவரையில் அபாரமாக இருக்கிறது. விறுவிறுப்பும் வேகமும் இன்றிச் சப்புச் சவுக்கென்று இருக்கும் ஒரு கிழவியின் கதையை வைத்துக்கொண்டு சுமார் நாலு மணி நேரம் குமரன் முதல் கிழவன் வரை, சாதாரண மனிதன் முதல் சிந்தனாவாதி வரை, குழந்தைகள் முதல் பாட்டிகள் வரை கண் கொட்டாமலும் கவனத்தை ஒரு கணம் இப்படியும் அப்படியும் திருப்பாமலும் பார்க்கும்படி நாடகம் நடத்துகிறார்கள். நாடகப் பண்பை உணர்ந்து நாடகத் திறமையோடு நாடகக் கலையின் சிகரமாக இந்த ஔவையார் நாடகத்தை அமைத்திருக்கிறார்கள்.




நடிப்புத் திறமையைப் பொறுத்தவரையில் இந்த நாடகத்தில் ஔவையாராக நடிக்கும் ஸ்ரீ டி. கே. ஷண்முகத்தை எப்படிப் பாராட்டுவது என்றே தெரியவில்லை. வேஷம், நடையுடை பாவனை எல்லாம் தத்ரூபமாக இருக்கிறது. நாடகம் ஆரம்பத்திலிருந்து முடியும் வரையில் நாலு மணி நேரமும் ஔவையார் இல்லாத காட்சியே கிடையாது. அந்த நாலு மணி நேரமும் குரலை மாற்றிக்கொண்டு, முதுகைக் கூனிக்கொண்டு, வாய் நிறைய இருக்கும் பற்களைக் காட்டாமல் நடிப்பதென்றால் அது சாதாரண விஷயமா? ஔவையாராகத் தோன்றுவது டி. கே. ஷண்முகமில்லை, யாரோ ஒரு பாட்டிதான் என்று சொல்லும்படியாக இருக்கிறது. ஒவ்வொரு காட்சியிலும் ஔவையாரின் முகபாவங்கள் நடிப்புக் கலையின் மிக முக்கியமான நுணுக்கங்களை உணர்ந்து நடிக்கும் திறமையை நமக்கு ஞாபகமூட்டுகின்றன.

ஒவ்வொருவரும் தங்கள் மனைவி மக்களுடன் பார்த்து மகிழவேண்டிய குற்றமற்ற நாடகம். இத்தகைய அருமையான நாடகத்தை நடத்திவரும் ஸ்ரீ டி. கே. எஸ். சகோதரர்களின் கலைப்பண்போடு கூடிய தமிழ்ப்பண்பையும் தாராளத்தையும் பாராட்டவேண்டும்.

அக்டோபர் மாதம் 20-ந் தேதி "சுதேசமித்திரன்" ஆசிரியர் ஸ்ரீ சி. ஆர். சீனிவாசன் அவர்கள் தலைமையில் ஔவையார் நாடகம் நடக்கப் போகிறது. அன்றைய வசூலைப் பேராசிரியர் வ. ரா. மணிவிழா நிதிக்குக் கொடுத்துவிடப் போகிறார்கள். அன்றைய தினம் ஔவையார் நாடகம் பார்ப்பவர்கள் கலைப்பண்பும் தமிழ்ப்பண்பும் நிறைந்த நாடகத்தைப் பார்த்துக் களிப்பதோடு தங்களுடைய பணம் ஒரு தமிழ்ப் பேராசிரியரின் நிதிக்குப் போய்ச் சேருகிறது என்று நினைத்துப் பெருமைப் படலாம்.




மலர் 8 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார் | இதழ் 12

# என்ன சேதி?

## தகிடுதத்தம் வேண்டாம்!

பிளாக் மார்க்கெட் பேர்வழிகளால் சர்க்காருக்கும் சமுதாயத்துக்கும் எத்தனை கஷ்ட நஷ்டங்கள் ஏற்படுகின்றனவோ, அதைப்போலவே சர்க்காருக்கு வரி செலுத்தாமல் தகிடுதத்தம் செய்வோராலும் கஷ்ட நஷ்டங்கள் ஏற்படுகின்றன. இந்தியாவின் பொருளாதாரப் பிரச்னைகள் திருப்திகரமாகத் தீரவேண்டுமாயின், தொழிலாளர்கள், முதலாளிகள், விவசாயிகள் முதலிய சகலரும் ஒத்துழைக்க வேண்டும் என்று வேண்டுகோள் விடுத்துள்ள சர்தார் பட்டேல், நியாயமான வரிகளைக் கொடுக்காமல் திருட்டுத்தனம் செய்வோரையும் கடுமையாக எச்சரித்திருக்கிறார்.

அதிகச் சம்பளம் வேண்டுமென்று தொழிலாளர் கோருகின்றனர். அதிகச் சம்பளம் இல்லையேயென்று சர்க்கார் சிப்பந்திகளும் சஞ்சலப் படுகிறார்கள். "மேற்படி கோரிக்கை நியாயமானதுதான்; ஆனால் அதிகச் சம்பளம் கொடுக்க எங்களிடம் பணம்தான் இல்லை" என்று சர்க்கார் கூறுகின்றனர். இந்த அதிருப்திகரமான நிலைமைக்குப் பரிகாரம் என்ன? அந்தப் பிரச்னையைத் தீர்ப்பதற்குற்ற ஒரே வழி என்னவெனில், தொழிலாளர்கள் சாதனங்களின் உற்பத்தியைப் பெருக்க வேண்டும்; லாப மூட்டைகளைக் கட்டுவோர் சர்க்காருக்குக் கொடுக்க வேண்டிய நியாயமான வரிகளைச் செலுத்த வேண்டும் என்கிறார் சர்தார் பட்டேல்.

பர்மாவிலும் மலேயாவிலும் பொது உடைமைக்காரர்கள் ஆக்கம் பெற்று வருகின்றனர். கல்கத்தாவிலும் அஸ்ஸாமிலும்கூட பொது உடைமைக்காரர்களின் விஷமம் ஆரம்பமாகியிருக்கிறது. ஹைதராபாத்திலோ பொது உடைமைக்காரர்கள் இரண்டு ஜில்லாக்களையே கைப்பற்றியிருந்தார்களாம், இந்திய சர்க்கார் அங்கு இராணுவ நடவடிக்கை எடுத்துக் கொள்ளாமல் இருந்திருப்பார்களாயின் மற்றும் சில ஜில்லாக்கள் பொது உடைமைக்காரர்களின் வசமாகியிருக்கும். அவர்களுடைய ஆதிக்கம் ஏற்படுவதற்கு நாட்டின் பொருளாதாரச் சீர்குலைவே காரணமாகும். உற்பத்தி பெருகுவதைத் தடுப்பதும், வரி கொடுக்காமல் தகிடுதத்தம் செய்வதும் பொருளாதாரச் சீர்குலைவுக்கு அடிகோலு மாதலால், அத்தகைய நிலைமை ஏற்படாமல் பாதுகாக்க வேண்டியது நாட்டின் நலத்தில் நாட்டங் கொண்ட ஒவ்வொருவருடைய கடமையும் ஆகும்.

## துவேஷம் தோல்வியுற்றது

ஓட்டக் கூத்தன் பாட்டுக்கு இரட்டைத் தாழ்ப்பாள் என்பதுபோல் காஷ்மீர ஜனங்கள் ஒரு முடிவுக்கு வந்திருக்கிறார்கள். பாகிஸ்தான் பிரதம மந்திரி லியாகத் அலிகான் சமீபத்தில் பெஷாவரில் பேசியபோது, காஷ்மீரத்திலுள்ள பெரும்பான்மையான முஸ்லிம்களும் காஷ்மீர் பாகிஸ்தானுடன் ஐக்கியமாவதையே விரும்புகிறார்கள் என்று குறிப்பிட்டார். காஷ்மீர முஸ்லிம்களோவெனில், தங்களுடைய சமஸ்தானம் இந்தியாவுடன் நிரந்தரமாக ஐக்கிய மடைய வேண்டுமென்று ஏகமனதாகத் தீர்மானித்திருக்கிறார்கள். ஸ்ரீநகரில் நடந்த காஷ்மீர ஜனங்களின் தேசிய மகாநாடு அவ்வாறு தீர்மானம் செய்திருக்கிறது.

பாகிஸ்தானால் ஏவப்பட்ட மலை ஜாதியினரும் பாகிஸ்தான் துருப்புகளும் காஷ்மீரத்தில் செய்த அட்டூழியங்களை நேரில் பார்த்த காஷ்மீர முஸ்லிம்கள் மேற்படி முடிவுக்கு வந்ததைக் குறித்து ஆச்சரியப் படுவதற்கில்லை. மற்றும் வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தில் பாகிஸ்தானின் அடக்குமுறை தர்பார் தலைவிரிகோலமாக இருந்து வருவதையும் அவர்கள் நன்கறிவார்களாதலால், காஷ்மீரப் பிரச்னையை சர்வஜன வோட்டெடுத்து முடிவு செய்யும் வரையில் காத்திருக்க விரும்பவில்லை. எனவே ஹைதராபாத்திலும் இந்தியாவிலும் பாகிஸ்தானின் மதத்துவேஷப் பிரசாரம் தோல்வியடைந்ததுபோல், காஷ்மீரத்திலும் தோல்வியடைந்து விட்டதென்றே சொல்லலாம்.

# கம்பர் மகாநாடு

★

ராஜாஜி மண்டபத்தில் ரஸிகமணி டி. கே. சி. அவர்களின் தலைமையில் இரண்டு தினங்கள் சிறப்பாக மகாநாடு நடைபெற்றது.

★

மகாநாட்டில் கலந்து கொண்ட பெருந்திரளான தமிழன்பர்களில் ஒருவர் கல்கத்தா பாரதி தமிழ்ச் சங்கத்தின் தலைவரான ஸ்ரீ டி. எஸ். சீதாபதி.





கனம் பக்தவத்ஸலம் திறந்து வைத்த கம்பர் கலைக் காட்சி வைபவத்தில் ஸ்ரீ ரா. பி. சேதுப்பிள்ளை அழகிய சொற்பொழிவு ஆற்றினர்.

●

தமிழன்பர்கள் கூட்டங்கூட்டமாகப் போட்டி யிட்டுச் சென்று கம்பர் கலைக்காட்சியைப் பார்வை யிட்டார்கள். (பார்வையாளர்களில் கனம் மாதவமேனனையும் காணலாம்.)



# போலி நண்பர்கள் உஷார்!

பதவியினால் மனிதர் மதிப்பும் மாண்பும் அடைந்த காலம் போய், மனிதரால் பதவி மதிப்பும் மாண்பும் அடையும் காலம் இந்தியாவில் வந்திருக்கிறது.

சுதந்திரத்தை இழந்திருந்த இந்தியாவில், மனிதர் பட்டம் பதவிகளுக்காகப் படாத பாடு பட்டனர். அவற்றையே தங்களுடைய வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டனர்.

ஆனால் இப்போதோ, அதாவது சுதந்திர இந்தியாவிலோ, உயர்ந்த மனிதர்களை அடைவதற்காகப் பதவிகள் படாத பாடு படுகின்றன!

கிடைப்பதற்கரிய பாத்திரங்களைப் பெற்றதால் மந்திரி பீடங்களும், கவர்னர் பீடங்களும், கவர்னர் ஜெனரல் சிம்மாசனமும் புனிதமடைந்து புதிய சோபையுடன் விளங்குகின்றன.

பதவிகளால் கௌரவம் பெற்றவர்களை அவற்றிலிருந்து விலகிய பின் ஜனங்கள் அடியோடு மறந்து விடுவார்கள். ஆனால் நமது அரும் பெரும் தலைவர்கள் சிம்மாசனத்தில் வீற்றிருந்தாலும், சிறைச்சாலையில் இருந்தாலும், சிறைக்கு வெளியில் குடிசையில் இருந்தாலும் அவர்களுடைய மாற்று அதிகமாகிறதே யொழியக் குறைவதில்லை.

இந்தியாவின் கவர்னர் ஜெனரல் பதவியைக் காட்டிலும் தாங்கள் அடையக் கூடிய சிறந்த வெகுமதி உலகிலே வேறு எதுவுமில்லை என்று பிரிட்டிஷார் நினைத்தனர்.

அந்தப் பதவி அவர்களுக்கு மகத்தான கௌரவத்தையும் பெருமையையும் கொடுத்தது. ஆனால் அதே பதவி இன்று நமது அரும் பெரும் தலைவர்களில் ஒருவரால் மகத்தான கௌரவத்தையும் பெருமையையும் அடைந்திருக்கிறது!

அன்றைய நிலைமைக்கும் இன்றைய நிலைமைக்கும் மற்றொரு பெரிய வேற்றுமை இருக்கிறது. அன்று உயர்ந்த பதவிகளில் இருந்தோரின் கடமை பிரிட்டிஷ் எஜமானர்களைத் திருப்தி செய்வதுடன் முடிந்து விட்டது.

ஆனால் இன்றோ மந்திரிகள், கவர்னர்கள், கவர்னர் ஜெனரல் முதலியோரின் எஜமானர் ஜனங்கள்தான்.

எனவே, இன்றைய அதிகாரிகளின் பொறுப்பு முன்பு இருந்ததைக் காட்டிலும் ஆயிரம் மடங்கு அதிகமாகியிருக்கிறது.

"இத்தனை மகா கஷ்டமான பிரச்னைகளைச் சமாளிக்க வேண்டியிருக்கும் என்று தெரிந்திருந்தால் நான் வைஸ்ராய் பதவியையே ஏற்றுக் கொண்டிருக்க மாட்டேன்" என்று சமீபத்தில் லார்டு மவுண்ட் பாட்டன் கூறியதன் காரணம் அதுதான்.

"எந்தத் தேசத்தையும் அல்லோல கல்லோலப்படுத்தக் கூடிய பயங்கரமான பிரச்னைகளைச் சமாளித்த பண்டித ஜவாஹர்லால் நேருவைக் காட்டிலும் சிறந்த ராஜதந்திரி உலகில் இல்லை" என்றும் லார்டு மவுண்ட் பாட்டன் ஒப்புக்கொண்டிருக்கிறார்.

* * *

சுதந்திர இந்தியாவின் நிர்வாகத்தை உலகம் புகழக் கூடியவாறு திறம்பட நடத்தி வரும் நமது இணையற்ற தலைவர்கள் முதலாளிகளின் நண்பர்கள் என்பது சிலரது கூற்று. அதைக் காட்டிலும் அபத்தமான, அசட்டுத்தனமான பிரசாரம் வேறெதுவும் இருக்க முடியாது.

உண்மையில் சுதந்திர இந்திய சர்க்கார் தொழிலாளர்களுக்குத்தான் அதிக நன்மை பயக்கும்படியான காரியங்களைச் செய்து வருகிறார்கள்.

முதலாளிகளின் லாபத்தில் தொழிலாளருக்கு பங்கு உண்டு என்பதைச் சர்க்கார் வழியில் ஒப்புக் கொண்டு, அந்த முறையை அமுலுக்குக் கொண்டு வருவதற்குற்ற ஏற்பாடுகளைச் செய்திருக்கிறார்கள்.

தொழிலாளர்களுக்கு ஆரோக்கிய வசதிகளைச் செய்து கொடுக்கும்படி முதலாளிகளை வற்புறுத்தும் சர்க்கார் மசோதா சமீபத்தில் இந்தியப் பார்லிமெண்டில் நிறைவேறியது.

இந்தியாவிலுள்ள தொழிற்சாலைகளில் வேலை செய்யும் இருபத்தைந்து லட்சம் தொழிலாளர்களுக்குப் பாதுகாப்பு அளிக்கும் தொழிலாளர்

இன்ஷூரன்ஸ் கார்ப்பொரேஷனைச் சென்ற வாரம் கவர்னர் ஜெனரல் ராஜாஜி ஆரம்பித்து வைத்திருக்கிறார்.

நோய் காரணமாக வேலையில்லாமல் கஷ்டப்படும் தொழிலாளர்களுக்கும், தொழிற்சாலைகளில் வேலை செய்யும் கர்ப்பஸ்திரீகளுக்கும், விபத்துக்குள்ளான தொழிலாளர்களுக்கும், அவர்களுடைய குடும்பங்களுக்கும் அந்தக் கார்ப்பொரேஷன் நிதியிலிருந்து பண உதவி செய்வார்கள்.

சர்க்காரின் பெரு முயற்சி காரணமாகப் பல்வேறு உதவிகளைப் பெறும் தொழிலாளர்கள், சர்க்காருக்கு—அதாவது தேசத்துக்குச் செய்ய வேண்டிய கடமைகள் இருக்கின்றன.

மேற்படி கார்ப்பொரேஷனை ஆரம்பித்து வைத்த ராஜாஜி, அந்தக் கடமைகள் பற்றி என்ன சொல்லியிருக்கிறார் என்பதைத் தொழிலாளர்கள் கவனிக்க வேண்டியது அவசியமாகும்.

“தொழிலாளர்கள் தங்களுடைய குறைகளைத் தீர்க்கும்படி தொழிற்சாலை நிர்வாகிகளை எதிர்த்துப் போராடட்டும். சோஷலிஸ்டு பிரதம மந்திரியான பண்டித ஜவாஹர்லால் நேருவைத் தலைவராகக் கொண்ட இந்திய சர்க்கார் அவ்விஷயமாகத் தொழிலாளர்களுக்குச் சகல உதவியும் அளிப்பார்கள். ஆனால், தொழிலாளர்கள் நம் தேசத்தில் முக்கிய சாதனங்களின் உற்பத்தி குறையும்படி செய்துவிடக் கூடாது. ஏனெனில், நம் தேசத்தின் முன்னேற்றமும் இந்தியாவிலுள்ள ஜனங்களின் சந்தோஷ வாழ்க்கையும் முக்கிய சாதனங்களின் உற்பத்தி பெருகுவதையே பொறுத்திருக்கிறது.”

* * *

ஜனங்களுக்கு இன்றியமையாத முக்கிய சாதனங்களை உற்பத்திசெய்யும் ஏழைகளின் வாழ்க்கை அந்தஸ்து உயர்வடைந்தாலன்றி, மேற்படி சாதனங்களின் விலைகள் குறைவதோ. பணவீக்கத்துக்குப் பரிகாரம் ஏற்படுவதோ முடியாத காரியம் என்று ராஜாஜி தெளிவாகக் கூறியிருப்பதுடன், உணவுப் பொருள்களை உற்பத்தி செய்வோர் உணவுக்குக் கஷ்டப்படும்படி நேரும் விபரீதத்துக்கு முற்றுப் புள்ளி வைத்தாக வேண்டும் என்றும் வற்புறுத்தியிருக்கிறார்.

எனவே ராஜாஜி, ஜவாஹர்லால்ஜி, தொழில் மந்திரி ஸ்ரீ ஜகஜ்ஜீவன்ராம் போன்ற ஏழை பங்காளர்கள் அதிகார பீடத்தில் வீற்றிருக்கும் வரையில் தொழிலாளர்களும் இந்தியாவிலுள்ள கோடிக்கணக்கான ஏழைகளும் அணுவளவும் கவலைப்பட வேண்டியதில்லை. இந்த உண்மையை அவர்கள் உணராது போலி நண்பர்களின் பிரசாரத்தில் மயங்குவது தேசத்தின் முன்னேற்றத்துக்கும் தேச மக்களின் சுபிட்சத்துக்கும் எவ்வளவு ஆபத்தானது என்பதைச் சொல்லவும் வேண்டுமா?

# புகையும் நெருப்பும்

## (மந்திரி சபை விவகாரம்)

புகை உள்ள இடத்தில் நெருப்பு இருக்கும் என்பது பழமொழி. இது முற்றும் உண்மை யல்ல. சில சமயம் நெருப்புப் பிடிக்காமல் வெறுமனே புகைந்துவிட்டு அவிந்து அடங்கிவிடுவதும் உண்டு! சில சமயம் புகை நெருப்பாக மாறி ஜுவாலை விடுவதும் உண்டு.

சென்னை மந்திரி சபை விஷயம் மறுபடியும் கொஞ்சம் புகையத் தொடங்கி யிருக்கிறது. புகையாகவே அடங்கி விடுமா, நெருப்பாக மாறுமா என்று இப்போது சொல்வதற்கில்லை.

சட்டசபை அங்கத்தினர் பலருக்குப் பொதுவாக மந்திரி சபை விடத்திலும், முக்கியமாகப் பிரதமரிடத்திலும் அதிருப்தி உண்டாகி வளர்ந்துகொண்டு வருகிறது.

சென்னைச் சட்டசபை அங்கத்தினரிடையே இன்று அதிக செல்வாக்குப் பெற்றிருப்பவர் ஸ்ரீ காமராஜ நாடார். வேறு எந்தத் தனி மனிதனையும் பின்பற்றுவோரைக் காட்டிலும் ஸ்ரீ காமராஜ நாடாரைப் பின்பற்றுவோர் அதிகம். ஸ்ரீ காமராஜின் கோஷ்டியோடு, அதிருப்தி கொண்ட ஆந்திர எம். எல். ஏ.க்களும் சேருவார்களானால் மந்திரி சபையைக் கவிழ்ப்பது அசாத்தியமாகாது.

ஸ்ரீ காமராஜருக்குத் தற்சமயம் ஓமந்தூர் மந்திரி சபையிடம் அதிருப்தி ஏற்பட்டிருக்கிறது. இந்த அதிருப்திக்குக் காரணங்கள் இன்னவை யென்று நிச்சயமாய்ச் சொல்ல முடியாது. சில காரணங்கள் ரகஸ்யமாய்ச் சொல்லப்படுகின்றன. அப்படி ரகஸ்யமாகச் சொல்லப்படும் காரணங்களில் ஓரளவு நியாயம் இருக்கிறது.

• • •

தற்சமயம் சென்னைப் பிரதம மந்திரியாயிருக்கும் ஓமந்தூர் ரெட்டியாரின் ஒழுக்கம், நேர்மை, தன்னலப் பற்றின்மை முதலிய குணங்களைப் பாராட்டாதவர்கள் இல்லை. யாரும் எதிர்பார்த்ததற்கு மேலாக அதிக நிர்வாகத் திறமையும் காட்டி இராஜ்யத்தை நடத்திக் கொண்டு வருகிறார். ஓமந்தூர் பிரதமரா யிருப்பது சென்னை மாகாணத்தின் நல்லதிர்ஷ்டத்தினாலேதான் என்று உண்மையாக நம்புவோர் பலர் உண்டு.

ஆனால் இது ஜனநாயக யுகம். சென்னை மாகாணத்தில் நடந்து வருவது ஜனநாயக ஆட்சி. ஜனநாயக ஆட்சி முறையில் அரசாங்கப் பொறுப்பு வகிப்பவர்கள் நல்ல காரியத்தைச் செய்தால் மட்டும் போதாது. அது நல்ல காரியம் என்பதைப் பொது மக்களுக்கு எடுத்துக் காட்டி அவர்கள் நம்பும்படி செய்யவேண்டும். பொது ஜனங்களின் வோட்டுப் பெற்ற பிரதிநிதிகளாகிய எம்.எல்.ஏ.க்களை அடிக்கடி கலந்து ஆலோசித்து அவர்களுடைய ஆதரவுடனேயே நல்ல காரியங்களையும் செய்யவேண்டும்.

ஜனநாயக ஆட்சி முறையின் கீழ் "எங்களைக் கேட்காமல் எங்களுக்கு யார் நன்மை செய்யச் சொன்னார்கள்?" என்று கேட்கப் பொது ஜனங்களுக்கு உரிமை உண்டு. பொது ஜனங்கள் தேர்ந்தெடுத்த எம். எல். ஏ.க்களுக்கும் அந்த பாத்தியதை உண்டு.

ஆதலின் பொதுஜனத் தலைவர்களுக்கும் எம். எல். ஏ. க்களுக்கும் பிரதமர் ரெட்டியார் பேட்டி கொடுப்பதில்லை, — அவர்கள் கொண்டு வரும் புகார்களையும் குறைகளையும் யோசனைகளையும் செவி கொடுத்துக் கேட்பதில்லை என்ற புகாரில் ஓரளவு உண்மையிருந்தாலும் அதைப் பிரதமர் திருத்திக் கொள்ள வேண்டியது அவசியம். பிரதமர் ரெட்டியார் பழமையில் பற்றுள்ளவர். எந்தப் பிரஜையும் எளிதில் பார்க்கக்கூடியவர்களாயிருந்த மனுநீதிச் சோழன் முதலியவர்களுடைய சரித்திரங்கள் ஓமந்தூர் ரெட்டியாருக்குத் தெரிந்தே இருக்க வேண்டும். அவர்களைப் பின்பற்றப் பிரதமர் முயல வேண்டும்.

நிர்வாக வேலை அதிகம் இருக்கிறது என்பது காரணமாயிருக்கும் பட்சத்தில், அதிக வேலையைக் குறைத்துக் கொள்வது அவசியமாகும். பிரதமரிடம் இப்போது தர்மஸ்தாபன நிர்வாக இலாகா, போலீஸ் இலாகா, பொது உத்தியோக இலாகா— ஆகியவை இருக்கின்றன. பொது உத்தியோக இலாகாவில் முக்கியமான வேலை, உத்தியோகஸ்தர்களை அங்கு மிங்கும் மாற்றுவது, நாற்பத்தைந்து ரூபாய் மாதச் சம்பளம்

வாங்குகிறவருக்கு ஸ்பெஷல் சம்பளமாக இரண்டரை ரூபாய் சம்பள உயர்வு செய்யலாமா, வேண்டாமா என்று முடிவு செய்வது—இம்மாதிரி விஷயங்கள்தான். மிகத் தொல்லை பிடித்த வேலை. இதை வேறொரு மந்திரியிடம் கொடுத்து விடலாம். அதைப் போலவே போலீஸ் இலாகாவையும் இன்னொருவரிடம் கொடுத்துவிடலாம்.

அப்போது பிரதமருக்கு, பேட்டிக்கு வருகிறவர்களைப் பார்க்கவும் அவர்களுடைய புகார்களையோ யோசனைகளையோ கேட்கவும் அவகாச மிருக்கும்.

* * *

ஸ்ரீ காமராஜ் பிரஸ்தாபித்ததாகக் கூறப்படும் இன்னொரு விஷயம், சர்க்கார் உத்தியோகஸ்தர்களை எம். எல். ஏ.க்கள் பார்த்துத் தங்களுடைய செல்வாக்கை உபயோகிப்பது சம்பந்தமானது.

இத்தகைய அதிகாரம் எம். எல். ஏ.க்களுக்கு இல்லை யென்றும், அவர்களுடைய பேச்சை உத்தியோகஸ்தர்கள் இலட்சியம் செய்ய வேண்டியதில்லை யென்றும் பொருள் படச் சர்க்கார் சுற்றறிக்கை ஒன்று சில காலத்துக்கு முன்பு வெளியாயிற்று.

எம். எல். ஏ.க்கள் தங்களுடைய செல்வாக்கை உபயோகப்படுத்துவதில் இரண்டு விதம் உண்டு. சர்க்கார் உத்தியோகஸ்தர்களை அவர்கள் பார்த்துப் பேசுவதும் இரண்டு விதமான காரியங்களுக்காக இருக்கலாம்.

பொதுநல சம்பந்தமான காரியங்களுக்காகவும், மக்களின் நியாயமான புகார்களையும் குறைகளையும் தெரிவித்துப் பரிகாரம் தேடுவதற்காகவும் எம். எல். ஏ.க்கள் ஸ்தல சர்க்கார் உத்தியோகஸ்தர்களைப் பார்க்க விரும்பலாம்.

இது எம். எல். ஏ.க்களின் முக்கியமான கடமைகளில் ஒன்று அல்லவா?

இந்தியா கடவுளின் அருளால் ஒருவிதமான கலவரமும் குழப்பமும் இல்லாமல் சுதந்திரம் அடைந்து விட்டது. இது நம்முடைய அதிர்ஷ்டம்.

அப்படிக் குழப்பமும் புரட்சியும் இல்லாமல் சுதந்திரம் அடைந்து விட்டபடியினால் சர்க்கார் நிர்வாக இயந்திரம்,—கிராம போர்டு ஆபீஸ் முதல் சர்க்கார் செக்ரடேரியட் வரையில், அப்படியே வேலை செய்து கொண்டு வருகிறது. இதுவும் நம்முடைய அதிர்ஷ்டந்தான்.

ஆனால் இந்தப் பெரு நன்மையிலும் ஒரு சிறிய குறைபாடு இருக்கத்தான் செய்கிறது. அது என்னவெனில், சர்க்கார் உத்தியோகஸ்தர்களில் பலர் இன்னும் பழைய பிரிட்டிஷ் அதிகார வர்க்க ஆட்சியே நடப்பதாக எண்ணிக்கொண்டு பொது மக்களின் நலன்களைக் கவனியாமலும் பொது ஜனங்களுக்குரிய மரியாதையைக் கொடுக்காமலும் நடந்து வருகிறார்கள். காரியங்கள் முன்போலவே 'சிவப்பு நாடா'வின் பிணைப்புக்கு உட்பட்டுச் சாவகாசமாக நடந்து வருகின்றன. அரைமணியில் முடிய வேண்டிய காரியங்களுக்கு ஆறு மாதம் ஆகி வருகிறது.

சர்க்கார் இலாகாக்களில் ஊழல்கள் மலிந்திருக்கின்றன வென்றும், லஞ்சப் பழக்கம் போகவில்லை யென்றும் பிரதமர் செட்டியாரே பல தடவை சொல்லியிருக்கிறார்.

பொது ஜனங்களுடைய வாழ்க்கை இப்போது பலவிதக் கண்ட்ரோல்களினால் பாதிக்கப்பட்டிருக்கிறது. எந்தச் சின்ன விஷயமானாலும் சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்கு மனுப் போட்டே காரியம் நடக்க வேண்டியிருக்கிறது.

இந்த நிலைமையில் சர்க்கார் இலாகாக்களும் சர்க்கார் உத்தியோகஸ்தர்களும் திறமையாகவும் சுறுசுறுப்பாகவும் தங்களுடைய வேலையைச் செய்யாவிட்டால் பொதுஜனங்கள் எத்தனை கஷ்டப்பட நேரிடும் என்று சொல்ல வேண்டியதில்லை.

ஓர் உதாரணம். பற்றாக்குறைப் பிரதேசம் ஒன்றில் சர்க்கார் வைத்திருக்கும் அரிசி ரேஷன் கடை ஒன்று இருக்கிறது. கடை என்று பெயருக்கு இருக்கிறதே தவிர, அதில் அரிசி கிடையாது. கடைக்காரனைக் கேட்டால் "அரிசி வரவில்லை" என்கிறான். இந்த மாதிரி நிலைமையில் அந்தத் தொகுதியின் எம். எல். ஏ. உடனே சம்பந்தப்பட்ட ஜில்லா அதிகாரிகளிடம் போய்ப் பரிகாரம் தேட வேண்டுமா, வேண்டாமா? அதிகாரிகளிடம் பரிகாரம் கிட்டா விட்டால் மந்திரிகளிடம் போய் சொல்லுவதற்கு உரிமை வேண்டுமா, வேண்டாமா? இதை யெல்லாம் செய்யாவிட்டால் "நீர் எங்கள் பிரதிநிதியாயிருந்து என்ன பயன்?" என்று அந்தத் தொகுதி வாக்காளர்கள் கேட்பார்களா, மாட்டார்களா?

இந்த மாதிரி பொதுக் காரியங்களில் எம். எல். ஏ.க்கள் மட்டுமல்லாமல் சமூகத்தின் பொறுப்பு வாய்ந்த தலைவர்கள் எல்லாருமே அதிகாரிகளைப் பார்த்துச் சொல்வது சாத்தியமாயிருக்க வேண்டும்.

எம். எல். ஏ.க்கள் தங்களுடைய செல்வாக்கைச் சுயநல காரியங்களுக்கு உபயோகப்படுத்துவதாயிருந்தால், "முடியாது"

என்று மறுக்க உத்தியோகஸ்தர்களுக்குத் தைரியம் இருக்கவேண்டும். அத்தகைய தைரியம் நிச்சயமாக நம் உத்தியோகஸ்தர்களுக்கு இருக்கும். அப்படிச் செல்வாக்கைத் துர் உபயோகப்படுத்தும் எம். எல். ஏ.க்கள் பேரில் காங்கிரஸ் ஸ்தாபனம் நடவடிக்கை எடுக்கவேண்டும்.

இதுதான் சரியான முறையே தவிர, சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் எம். எல். ஏ.க்களை இலட்சியமே செய்ய வேண்டியதில்லை என்ற எண்ணம் பரவி விட்டால், ஏற்கெனவே பொதுஜனங்களை அலட்சியம் செய்யப் பழகிய உத்தியோகஸ்தர்கள் பழையபடி யதேச்சாதிகாரிகளாகவே நடந்துகொள்ளத் தொடங்கி விடுவார்கள் அல்லவா? தினந்தோறும் சர்க்கார் காரியாலயங்களுக்குச் சென்று பொதுஜனங்கள் முட்டிக்கொள்ள வேண்டியதாயிருக்கும் நிலைமையில், சர்க்கார் ஊழியர்கள் யதேச்சாதிகாரிகளைப் போல் நடந்துகொண்டால், "இது என்ன சுதந்திரம்? இது என்ன சுயராஜ்யம்!" என்று பொது ஜனங்கள் வெறுப்படைய ஏதுவாகு மல்லவா?

* * *

தேசத் தொண்டில் தியாகம் செய்தவர்களுக்கு நில மான்யம் கொடுக்கும் விஷயம் ஒன்று இருக்கிறது.

ஏற்கெனவே பிரிட்டிஷார் இந்தியாவைக் கைப்பற்றிய காலத்தில் பிரிட்டிஷாருக்கு உதவி செய்தவர்களுக்குக் கிராமம் கிராமமாக மான்யம் கொடுத்திருக்கிறார்கள்.

இந்தியாவின் சுதந்திரப் போரில் சர்வபரித் தியாகம் செய்ய முன் வந்தவர்களுக்கு நம் மாகாண சர்க்கார் ஐந்து ஏக்கரா நன்செய் அல்லது பத்து ஏக்கரா புன்செய் மான்யம் கொடுப்பதாகச் சொன்னார்கள்.

தேசத் தொண்டர்கள் செய்துள்ள சேவையையும் தியாகத்தையும் நினைக்கும் போது இது மிகவும் அற்பமானது.

இந்த ஐந்து ஏக்காராவுக்கும் பத்து ஏக்கராவுக்கும் பல தொண்டர்கள் மனுப் போட்டிருக்கிறார்கள் என்றால், அது, தரிசு நிலத்தைப் பண்படுத்தி வரப்போகிற பலனை உத்தேசித்து அல்ல. தங்களுடைய தேச சேவைக்கும் தியாகத்துக்கும் ஓர் அறிகுறியாகப் பின் தலைமுறைகளுக்கு விட்டுப் போகக் கூடியதாயிருக்கட்டும் என்றே அநேகர் மனுச் செய்திருக்கிறார்கள்.

ஆனால் வந்த மனுக்களில் நூற்றுக்குப் பத்து வீதம் கூட இன்னும் பைசல் ஆகவில்லை என்று தெரியவருகிறது.

ஆங்காங்குள்ள ஜில்லா கலெக்டர்கள் ஏதோ தங்களுடைய பிதிரார்ஜித சொத்தைப் பறி கொடுப்பதாக எண்ணிக்கொண்டு இல்லாத முட்டுக்கட்டைகளை யெல்லாம் உண்டு பண்ணிக் கொண்டு வருகிறார்கள்.

இந்த விஷயத்தில் பிரதமர் தக்க நடவடிக்கை எடுக்கவில்லை யென்பது ஸ்ரீ காமராஜின் புகார்களில் ஒன்று என்று அறிகிறோம். இது மாதிரி இன்னும் எட்டு விஷயங்களில் ஸ்ரீ காமராஜுக்கும் பிரதமருக்கும் அபிப்பிராய பேதம் இருப்பதாகச் சொல்லப் படுகிறது.

சரியான, அதிகார பூர்வமான தகவல்கள் வெளியாகாத வரையில், இரு கட்சியின் நியாயா நியாயங்களைப் பற்றி உறுதியான அபிப்பிராயம் சொல்ல முடியாது.

ஆனால் பொதுப்படையாக இரண்டு விஷயங்களை எவ்விதச் சந்தேகத்துக்கும் இடமின்றி உறுதியாகச் சொல்லலாம்.

1. தற்சமயம் கனம் ஓமந்தூர் ரெட்டியார் மந்திரி சபை வீழ்வதும் அல்லது கட்சிகளின் பலப் பரீட்சையில் குழப்பம் ஏற்படுவதும் இந்த மாகாணத்தின் நன்மைக்கு ஏற்றதல்ல. ஓமந்தூர் ரெட்டியாரைப் போன்ற ஒழுக்கத்தில் சிறந்த காந்தி பக்தர் சென்னை மாகாணத்துக்குத் தலைமை வகிப்பது இம் மாகாணத்தின் அதிர்ஷ்டம். அதற்குப் பங்கம் எதுவும் வரக்கூடாது.

2 பிரதமர் ஓமந்தூர் ரெட்டியார் தாம் தலைமை வகிப்பது ஜனநாயக அரசாங்கம் என்பதை இன்னும் கொஞ்சம் நன்கு உணர்ந்து, கூடுமானபோதெல்லாம் ஜனப் பிரதிநிதிகளைக் கலந்து கொண்டு, அவர்களுடைய விருப்பத்தை யொட்டி நிர்வாகத்தை நடத்திக் கொண்டு போகவேண்டும். அவருடைய மனச்சாட்சிக்கு விரோதமாக ஒழுக்கக் குறைவான 'காரியத்தை யாராவது செய்யச் சொன்னால் "முடியாது" என்று சொல்லவும், பதவியை ராஜிநாமாச் செய்து விடவும் அவருக்கு உரிமை உண்டு.

மற்றப்படி சாதாரண நிர்வாக முறைகளில், தம்மைப் பிரதமராகத் தேர்ந்தெடுத்த ஜனப்பிரதிநிதிகளைக் கலந்துகொண்டு காரியம் செய்ய வேண்டும். இதில் முறை தவறு எதுவும் இல்லை; அவருடைய கௌரவத்துக்கும் இழுக்கு நேராது.

மொத்தத்தில், இப்போது ஏற்பட்டிருக்கும் மந்திரிசபைப் புகைச்சல் புகைச்சலோடு போகவேண்டுமென்றும். நெருப்பு மூளக் கூடாது என்றும் விரும்புகிறோம்.

# தென்னாட்டு அழகிய நங்கை

கொஞ்சம் புஷ்பங்கள் சூட்டி, கூந்தலைச் சொகுசாக சிங்காரித்து தன் சோபையை பன்மடங்கு அதிகமாக்கிக் கொள்ளுகிறாள். பளபள வென்றிருக்கும் அவளுடைய கூந்தல், டாம்கோ கூந்தல் தேங்கா யெண்ணெயும் ஷாம்பூவும் அவள் வழக்கமாக உபயோகித்து வருவதன் பயனாகும்.

**டாம்கோ கூந்தல் தேங்கா**
**யெண்ணெயும் ஷாம்பூவும்**



தி டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிமிடெட்

# நாலாவது கம்பர் மகாநாடு

## ரஸிகமணி டி. கே. சி. அவர்களின் தலைமையுரைச் சுருக்கம்

தமிழ்நாட்டைவிடச் செல்வம் படைத்த நாடுகள் உலகத்தில் பல இருக்கின்றன. லக்ஷ்மி தேவியின் கடைக்கண் நமக்கு ஓரளவுதான் அருள் பாலித்திருக்கிறது.

ஆனால் கலைமகள் கடாக்ஷமோ பூரணமாய் இருந்து வந்திருக்கிறது.

உலகத்திலேச் சிறந்த கலைவாணர் என்று புகழ் பெற்ற அறிஞர்கள் என்ன சொல்லுகிறார்கள்:

"கலைகளுக்கெல்லாம் இருப்பிடம் தமிழ்நாடுதான்" என்று ஏகோபித்துச் சொல்லுகிறார்கள்.

சிற்பம் என்ற கலையை எடுத்துக் கொண்டால், தமிழ்நாட்டின் கோயில்களும் கோபுரங்களும் என்றென்றும் தனித்த புகழ் கொண்டு நிற்கும்.

ஓவிய உலகத்தில் நடராஜ மூர்த்தியின் திவ்ய ரூபம் சிகரமாய் விளங்குகிறது.

சங்கீதமும் நடனமும் தெய்வத்தன்மை வாய்ந்தன என்று சொல்லும்படி பூரணத்துவம் அடைந்திருக்கின்றன. ஏனையோருக்கு எட்டாத கலைகள் அவை. பிற நாட்டார் வந்து எவ்வளவு முயன்றாலும் கற்க முடியாத அத்தனை நுட்பமும் தெளிவும் வாய்ந்தனவாய் இருக்கின்றன.

இந்தக் கலைகளையெல்லாம் விட மேம்பட்டதாய்த் தமிழ் நாட்டில் உள்ளவருக்கே உரிய தனிச் செல்வமாய் இருக்கிற கலை, கவி.

கவி சம்பந்தமாக அயல் நாட்டு மேதாவிகள் "தமிழ்க் கவியே உலகத்திலேச் சிறந்தது" என்று மிச்சம் வைக்காமல் பேரம் பண்ணாமல் சான்று பகர்ந்திருக்கிறார்கள். தமிழ்க் கவி இப்படி இருக்கிறது.

கம்பரோ கவிச்-சக்கரவர்த்தி. தமிழ்க் கவிக்கு மாத்திரம் சக்கரவர்த்தி அல்ல. உலகக் கவிக்கே சக்கரவர்த்தி என்று சொல்லுதல் பொருந்தும். அப்படிச் சொல்லுவது வெறும் வார்த்தை அல்ல. படாடோபம் அல்ல. தேறத் தெளிந்து சொன்ன சொல்.

**கம்பர் கவி**

கம்பர் கவியை ஒட்டி அற்புதமான நாடகத்தைக் காணலாம். வர்ணனையைக் காணலாம். நவரஸங்களையும் காணலாம். சோகம் வீரம் கருணை முதலான ரஸங்களை அப்படியே பருகலாம். விஸ்தாரமான முறையில் காட்சிகளை அமைத்துப் பாத்திரங்களை உண்மையான தொனிகளில் பேசச் செய்வார் கவிஞர். எல்லாம் சேர்ந்து நம்மை மயக்கும், உருக்கிவிடும்.

இத்தகைய கவிஞர், வேறு ஒரு நாட்டுக்குக் கிடைத்திருந்தால் அவரைத் தலைமேல் தூக்கி வைத்து ஆடிக் கொண்டே இருப்பார்கள். கோயில் கட்டுவார்கள்.

**மாண்டலேயில் 729 சுற்றுக் கோவில்கள்**

பர்மாவிலுள்ள மண்டலேயில் புத்த பகவானுக்கு ஒரு கோயில் கட்டியிருக்கிறார்கள். அதற்குச் சுற்றுக் கோயில்களாக 729 சிறு சிறு கோயில்களும் வகுத்திருக்கிறார்கள். ஒவ்வொன்றின் உள்ளே போனால் என்னத்தைப் பார்ப்போம்: புத்த பகவானது திருவாக்கு ஒன்றை எழுதியிருக்கப் பார்ப்போம். அவ்வளவும் செலவாகும். அதற்கு மேலும் செய்யலாம் கம்பரது ஆயிரக்கணக்கான பாடல்களுக்கு. அவ்வளவு வேண்டாம்.

**தேரழுந்தூரில் கம்பர் மேடு**

கம்பர் பிறந்த ஊரான தேரழுந்தூரில் அவருடைய வீடு நின்ற இடம் 'கம்பர் மேடு' என்ற பெயரோடு இன்னும் இருக்கிறது. அதில் கம்பர் நிலையம் கட்ட வேண்டும். கம்பரது பெயரைக் காப்பாற்றுவதற்காக அல்ல கம்பர் நிலையம் கட்டுவது. தமிழராகிய நம்முடைய பெயரைக் காப்பாற்றிக் கொள்வதற்காகத்தான்.

**கம்பர் நிலையம்**

தேரழுந்தூரில் கம்பர் நிலையம் எழுந்து நிற்கவே போகிறது. வெகு சீக்கிரத்தில் எழுந்து நிற்கப் போகிறது. தரிசிக்கப் போகிறவர்களுக்கு மண்டபத்துச் சுவர்கள் கம்பரது அரிய அற்புதமான பாடல்களை அழகாய் எடுத்து ஓதும். அந்தப் பாடல்களில் ஒன்று இதுவாயிருக்கலாம்.

பிரகலாதன் இரணியனுக்கு இறைவனைப் பற்றிச் சொல்லும் பாடல்:

சாணினும் உளன், ஓர்தன்மை
அணுவினைச் சதகூறிட்ட

கோணினும் உளன், மாமேருக்
குன்றினும் உளன், இந்நின்ற

தூணினும் உளன், நீசொன்ன
சொல்லினும் உளன், இத்தன்மை

காணுதி விரைவின் என்றான்;—
நன்றெனக் கனகன் நக்கான்.

[சதகூறு இட்ட கோண்: நூறு பாகமாகப் பிரித்து வைத்த அதிநுட்பமான துகள்; நன்றெனக் கனகன் நக்கான்: பலே பேஷ் என்று இரணியன் சிரித்தான்.]

★ ★ ★

இந்த மாதிரி அதி அற்புதமான தாளங்களோடு ஒலிக்கும் கவிகள் கம்பராமாயணத்தில் எத்தனை எத்தனையோ!

**கம்பரிடம் அறிய வேண்டிய விஷயங்கள்**

கலைகளின் உண்மைகளையும் நுணுக்கங்களையும் கம்பர் அறிந்த அளவு நாம் அறியவில்லை.

இறுதியில்லாத பேரண்டத்தை அவர் அளப்பார். அதைவிட விசாலமான ஞானிகளின் உள்ளத்தையும் அளப்பார் அவர். இத்தகைய விஷயங்களைப் பற்றிக் கம்பர் பேசும்போது கைகட்டி வாய் பொத்தி நிற்க வேண்டியதுதான் நாம்.

இந்த உண்மைகளை, உலகத்தில் வேறு யாருக்கும் கிட்டாத இசைப் பண்போடு, நமக்கு எடுத்துப் பேசுகிறார்.

**நாம் பாக்கியசாலிகள்**

கம்பரது கவி என்றால் தெய்விக உணர்ச்சியோடும் தெய்விக ஓசையோடுமே நம்முடைய காதில் ஒலித்துக் கொண்டிருக்கும் பாடல்.

இந்த அற்புதமான மந்திர சக்திகள் எல்லாம் கம்பருக்குச் சிறப்பாய் உரியன. அவைகளை அனுபவிக்கவே நாம் தமிழ் நாட்டில் பிறந்திருக்கிறோம். நாம் பாக்கியசாலிகள்; சந்தேகமே இல்லை.



[பர்மாவில் மாண்டலேக்கு அருகிலுள்ள இந்தப் புத்தர் கோயிலில் மத்தியிலுள்ள பெரிய கோபுரத்தைத் தவிர 729 மணி மண்டபங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு மண்டபத்திலும் சலவைக் கல்லில் புத்தபகவானுடைய உபதேசம் ஒன்று பொறிக்கப் பட்டிருக்கிறது. இம்மாதிரி, கம்பர் பாடல் ஒவ்வொன்றுக்கும் ஒரு மண்டபம் கட்டலாம் என்று ரஸிகமணி கூறுகிறார்.]

கம்பர் விழாவை யொட்டி நடந்த பரதநாட்டியக் கச்சேரியில் இரண்டு கம்பர் பாடல்களை ஸ்ரீமதி எம். எஸ். சுப்பு லக்ஷ்மி அவர்கள் பாட, ஆனந்தி-ராதா நடன அபிநயம் செய்தார்கள். நடன ஆசிரியர் ஸ்ரீ ராமய்யாப் பிள்ளையை மகாநாட்டுத் தலைவர் டி. கே. சி. பெரிதும் பாராட்டினார்



யானை மீது கம்பர் படத்தையும், பல்லக்கில் கம்ப ராமாயணச் சுவடிகளையும் வைத்து, பூச்சக்கரக் குடைகளும், வெண்சாமரங்களும், ஒட்டகையும் புடை சூழ குனிக்கரைப் பிச்சையப்பா அவர்களின் அபூர்வ நாதஸ்வரக் கச்சேரியுடன் ஊர்வலம் நடத்தப்பட்டது.

# சென்னையில் கவிச்சக்கரவர்த்தி

பகீரதன்

"அறிவுடையோரையும் லோகோபகாரிகளையும் வீரர்களையும் கொண்டாடாத தேசத்தில், அறிவும் லோகோபகாரமும் வீரமும் மங்கிப் போகும். தமிழ்நாட்டில் இப்பொழுது புதிய உயிர் தோன்றியிருக்கிறது. நாம் இந்த விஷயத்தில் தமோ குணம் செலுத்தாமல் கம்பர், இளங்கோ, வள்ளுவர் முதலிய மகா கவிகளுக்கு ஞாபகச் சின்னங்களும் வருஷோத்ஸவங்களும் ஏற்பாடு செய்ய வேண்டும். ஜன்ம தினங்கள் நிச்சயப்பட வழியில்லை. ஆதலால் சரஸ்வதி பூஜைக்கு முன்பு அல்லது பின்பு குறிப்பிட்டதொரு தினத்தில் இந்த மகான்களின் ஞாபகத்தைக் கொண்டாடுதல் பொருத்தமுடைய செய்கையாகும்" என்று மகாகவி பாரதியார் சொல்லி விட்டுப் போனார்.

"ஐயா, பாரதியாரே! தாங்கள் மேற்படி வாசகங்களைச் சொன்னபோது நாங்கள் இந்த நாட்டில் பிறக்கவே இல்லை. பிறந்திருந்தாலும் தங்களின் திருவாக்கை உணரும் சக்தி பெற்றிருக்கவில்லை. சக்தி பெற்றிருந்தாலும் எங்கள் சக்தியை எல்லாம் தேசம் விடுதலை பெறும் வழியில் செலவிட்டுக் கொண்டிருந்து விட்டோம். இன்று தேசம் சுதந்திரம் பெற்றுவிட்டது. தங்கள் அருமையான திருவாக்கை நிறைவேற்றி வைத்து விட்டோம்" என்று சொல்லி ஒவ்வொரு தமிழனும் பெருமைப் படும்படியாகச் சென்ற புரட்டாசி மாதம் 24, 25, 26-தேதிகளில் சரஸ்வதி பூஜைக்கு முன் மூன்று தினங்களும் 'நானாவது கம்பர் மகாநாடு' ரஸிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்கள் தலைமையில் சென்னை ராஜாஜி மண்டபத்தில் நடந்தது.

சென்னை நகரிலே மூன்று தினங்களும் ஒவ்வொரு தமிழனுடைய மனதிலும் கம்பர் வீற்றிருந்தார். சக்கரவர்த்தி ராஜாஜி மண்டபத்தில் கவிச்சக்கரவர்த்தி கம்பர் பலமாதிரி உருவங்களில் தோற்றமளித்தார். வர்ண சித்திரங்களில் விளங்கினார்; ரஸிகர்களின் சொற் சித்திரங்களில் திகழ்ந்தார்; சங்கீத வெள்ளமாகப் பொங்கினார்; நாட்டியத்திலும் அபிநயத்திலும் காட்சி அளித்தார்; ஏராளமான தமிழ் அன்பர்களின் உருவத்திலே சிலையாக நின்று தவம் செய்தார்; மண்டபத்தின் இட நெருக்கடி காரணமாக வெளித் தாழ்வாரங்களில் நின்று கஷ்டப்பட்டுத் தவித்தார். இந்த அற்புதமான காட்சிகளை எல்லாம் நேரில் பார்த்து அனுபவிக்கக் கொடுத்து வைத்தவர்கள் எல்லாரும் அதிர்ஷ்டசாலிகள் தான்.

* * *

அக்டோபர் மாதம் எட்டாந் தேதி வெள்ளிக்கிழமை காலையில் ராஜாஜி மண்டபத்தில் தமிழ் அன்பர்களும், தமிழ்ப் புலவர்களும், பத்திரிகைக்காரர்களும், கம்பர் பக்தர்களும் தமிழ்நாட்டின் பலபாகங்களிலிருந்தும் வந்து கூடியிருந்தனர். நாலாவது கம்பர் மகாநாட்டை யொட்டிக் 'கம்பர் கலைக் கண்காட்சி' ஒன்றைத் திறக்கக் கம்பர் கழகத்தார் ஏற்பாடு செய்திருந்தனர். ஸ்ரீ தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் தலைமையில் கண்காட்சித் திறப்புவிழா நடந்தது. கம்பர் கலைக் கண்காட்சியைக் கண்டு களிக்கக் கூடியிருந்தவர்களை வரவேற்றுக் கலைமகள் ஆசிரியர் ஸ்ரீ கி. வா. ஜகந்நாதன் பேசிய பிறகு ஸ்ரீ மீனாட்சிசுந்தரனார் கம்பன் புகழையும் கம்ப ராமாயணத்தின் பெருமையையும் நன்கு எடுத்துச் சொல்லி 'கம்பர் கலைக் கண்காட்சி'யைத் திறந்து வைக்கும்படி மந்திரி கனம் பக்தவத்ஸலம் அவர்களைக் கேட்டுக் கொண்டார்.

கனம் பக்தவத்ஸலம் கம்பர் கலைக் கண்காட்சியைத் திறப்பதற்கு முன் "சாதாரணமாக ஜவுளிக் கடைகளையும் சாப்புக் கடைகளையும் வைத்துக் கண்காட்சியை நடத்திவிடலாம்; நிறையப் பொருளும் சேர்ந்து விடலாம். ஆனால் இதுபோன்ற கலைக் கண்காட்சியை நடத்துவது மிகவும் சிரம சாத்தியமானது. இந்தக் கண்காட்சியை நடத்தும் கம்பர்

கழகத்தாருக்கு இந்தக் காட்சியை நடத்துவதால் வருமானம் கிடைக்காது. செலவும் கஷ்டமும்தான் ஏற்படும். ஆனால், நமக்கோ கம்பர் கலைக் கண்காட்சி ஒரு சிறந்த பொக்கிஷம்'' என்று சொல்லிப் பூட்டாமல் பூட்டியிருந்த கம்பர் கலைக் கண்காட்சியைத் திறக்காமல் திறந்து வைத்தார்.

அவருக்குப் பின் பேசிய ஸ்ரீ ரா. பி. சேதுப் பிள்ளை அவர்கள் கம்ப ராமாயணத்தை உயர்ந்த முறையில் அழகாகப் பதிப்பித்துக் குறைந்த விலைக்குக் கிடைக்கும்படி சர்க்கார் செய்ய வேண்டும் என்று வேண்டிக் கொண்டார். பாரதி வித்தியாலயப் பெண்கள் கம்பர் புகழைப் பாடிய பிறகு கூட்டம் கம்பர் கலைக் கண்காட்சியைப் பார்க்கச் சென்றது.

ராஜாஜி மண்டபத்தின் மாடியில் வைத்திருந்த கம்பர் கலைக் கண்காட்சியைப் பார்க்க ஆயிரக்கணக்கான தமிழ் அன்பர்களுடன் அடியேனும் சென்றேன். பரந்து விரிந்து கிடக்கும் அந்த விசாலமான பெரிய மண்டபத்தில், கம்ப ராமாயணத்தின் காட்சிகளைக் காட்டும் பல சைத்திரிகர்கள் வரைந்த சித்திரங்களும், கம்ப ராமாயணத்தின் விதம் விதமான புத்தகப் பதிப்புகளும், கம்பன் திருஉருவச் சித்திரங்களும், ஓலைச் சுவடிகளுமாகச் சுமார் நானூறு உருப்படிகள் கம்பர் கலைக் கண்காட்சியில் காட்சி அளித்தன.

தமிழ்த் தாத்தா மகா மகோபாத்தியாய டாக்டர் உ. வே. சாமிநாத ஐயர் அவர்கள் தாமே பார்த்துத் திருத்திய கம்பராமாயணப் பிரதிகளும் ஓலைச் சுவடிகளும் கம்பன் பெருமையோடு தமிழ்த்தாயின் புகழையும் சொல்லிக் கொண்டிருந்தன. ஸ்ரீ வ. வே. சு. ஐயரின் கம்ப ராமாயண ஆங்கில மொழிபெயர்ப்புப் பிரதி ஒன்று காட்சி தந்தது. ஆழ்வார் திருநகரியிலிருந்து வந்திருந்த ஸ்ரீ பெரியன் சீனிவாச ஐயங்கார் அவர்களுடைய கம்பராமாயண ஏட்டுச் சுவடி அனைவருடைய கவனத்தையும் கவர்ந்தது. கம்பன் பிறந்த தேரழுந்தூர் விருக்கும் கம்பன் மேட்டிலிருந்து கம்பர் வீட்டுச் செங்கல் ஒன்றையும் கொண்டுவந்து வைத்திருந்தார்கள். அவைகளை எல்லாம் பார்க்கப் பார்க்க என்னை அறியாமலேயே என்னுடைய மனதில் தமிழனென்ற பெருமை தோன்றித் தலை நிமிர்ந்து நின்றேன்.

அன்றைய தினம் மாலை ஏழு மணிக்குக் கம்பர் விழாவை யொட்டிக் குமாரிகள் ஆனந்தி — ராதாவின் பரத நாட்டியக் கச்சேரி நடைபெற்றது. இந்தக் கச்சேரியில் நடுநாயகமான அம்சமாக விளங்கியது: ''மானினம் வருவ போன்றும்'' ''தோள் கண்டார் தோளே கண்டார்'' என்னும் இரண்டு கம்பர் பாடல்களை ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்கள் பாடியதும், அதற்கிசைய ஆனந்தி—ராதா அபிநய நடனம் செய்ததுமாகும். இம்மாதிரி புதிய புதிய முறையில் பரதநாட்டியக் கலை வளர்ந்து வரும் நடன ஆசிரியர் வழுவூர் ராமையாப் பிள்ளையின் திறத்தை ரஸிகமணி டி. கே. சி. அவர்கள் பெரிதும் பாராட்டிப் பேசினார்கள்.

* * *

அக்டோபர் மாதம் ஒன்பதாந் தேதி பிற்பகல் மூன்றரை மணிக்கு நாலாவது கம்பர் மகாநாடு ஆரம்பமாயிற்று. சங்கீத பூஷணம் தேரழுந்தூர் சீனிவாசாச்சாரியார் கம்பர் பாடல்கள் பலவற்றைக் கீர்த்தன ரூபத்தில் வர்ணமெட்டுகள் அமைத்து ஒருமணி நேரம் அழகாகக் கச்சேரி செய்தார். பிறகு வரவேற்புக் கமிட்டித் தலைவரான ''கல்கி'' ஆசிரியர் வந்திருந்தவர்கள் எல்லாரையும் வரவேற்று நல்வரவு கூறினார்.

தமிழர் ஆட்சி சென்னையில் நடைபெறுகிறது என்பதற்கு அத்தாட்சியாகக் கம்பர் மகாநாட்டை ஆரம்பித்து வைப்பதற்கு நமது பிரதமர் கனம் ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் அவர்கள் தம்முடைய உடல் நிலையையும் கருதாது விஜயம் செய்திருந்தார்கள். பல்நோய் அதிகமாகி அன்றுதான் அவருடைய இரண்டு பற்கள் எடுக்கப்பட்டிருப்பினும் கம்பர் விழாவுக்கு வந்தே தீருவேன் என்று வம்பு பிடித்து வந்திருந்தார்கள். இராம ராஜ்ய இலட்சியத்தை நன்கு எடுத்துக் கூறிய பிரதமர் ரெட்டியாரின் பிரசங்கத்தைப் பிரசண்ட விகடன் ஆசிரியர் ஸ்ரீ நாரண துரைக்கண்ணன் வாசித்தார்.

நாலாவது கம்பர் மகாநாட்டைத் தலைமை தாங்கி நடத்திக் கொடுக்கும்படி ஸ்ரீ டி. கே. சிதம்பரநாத முதலியார் அவர்களை ''ஹிந்துஸ்தான்'' ஆசிரியர் ஸ்ரீ நாராயண ஐயங்கார் கேட்டுக் கொண்டார். அதைத் ''தினமணி'' துணை ஆசிரியர் ஸ்ரீ ஏ. ஜி. வேங்கடாசாரியாரும், ''தினசரி'' துணை ஆசிரியர் ஸ்ரீ வேங்கடராஜுலு நாயுடுவும் ஆமோதித்தார்கள்.

கம்பரின் ரஸிகர்களும், தமிழன்பர்களும் செய்த பலத்த கரகோஷங்களுக்கு இடையே ரஸிகமணி அவர்கள் தலைமை தாங்கி நிகழ்த்திய சொற்பொழிவு மகாநாட்டுக்கே ஒரு சிகரமாக வாய்த்தது. தம்முடைய முதுமையையும் உடல் நிலையையும் கவனியாமல் என்றும் எழுபது வயது இளைஞராக இருக்கும் ரஸிகமணி அவர்கள் கம்பர் மகாநாட்டுக்குத் தலைமை வகித்தது தமிழுக்கும், தமிழ் நாட்டுக்கும் கம்பருக்கும் பெருமை என்றுதான் சொல்ல வேண்டும்.



கம்பர் மகாநாட்டைத் திறந்து வைத்த கனம் ஓமந்தூர் ரெட்டியார்

தலைவர் பேசிய பிறகு ஸ்ரீமதி நீலாவதி அம்மையார், வித்வான் ஸ்ரீ ஏ. எஸ். ஞானசம்பந்தம், மதுரைத் தமிழ்ச் சங்கத்தைச் சேர்ந்த ஸ்ரீ எஸ். ஆர். கிருஷ்ணசாமி ஐயங்கார், இந்திய சர்க்காரின் [illegible] இலாகாவைச் சேர்ந்த ஸ்ரீ வி. டி. கிருஷ்ணசாமி ஆகியவர்கள் கம்பர் கவிதையைப் பற்றியும் அவருக்

நத் தேரழுந்தூரில் ஞாபகார்த்தம் நிறுவ வேண்டியது பற்றியும் பேசினார்கள். ஏழு மணிக்கு இசையரசு எம். எம். தண்டபாணி தேசிகரின் இசைக் கச்சேரி நடந்தது. ஸ்ரீ தேசிகர் கம்பன் புகழை இசை மழையாகப் பொழிந்து விட்டார். அவருக்குப் பக்க வாத்தியமாக ஸ்ரீ கோவிந்தசாமி நாயகர் வயலினும் ஸ்ரீ டீ. வி. என். நாராயணன் மிருதங்கமும் வாசித்தது இசை மழைக்கு மின்னலும் இடியும்போல் முழங்கின.



கம்பர் புகழ் பாடிய
ஸ்ரீ தண்டபாணி தேசிகர்

நான்காவது கம்பர் மகா நாட்டின் மூன்றாவது நாள், மிகவும் முக்கியமான நாள். அன்று சூரியன் வழக்கத்தை விடக் கொஞ்சம் முன்னதாகவே வான வீதியில் பவனி வர ஆரம்பித்து விட்டான். வான வீதியிலிருந்து சென்னை எழும்பூர் சாகேத நிலையத்திற்கு நேரே தன்னுடைய திருப்பார்வையைத் திருப்பியவன் அங்கு நடந்த காட்சியைப் பார்த்து அப்படியே சிறிது நேரம் பிரமித்து நின்று விட்டான்.

சாகேத நிலையத்திலிருந்து ரசிகமணி ஸ்ரீ டி. கே. சி. அவர்கள் தலைமையில் கம்பர் விழா ஊர்வலம் புறப்பட்டது. ஊர்வலத்திற்கு முன்னால் ஒரு ரிஷபம் தன்னுடைய முதுகிலே இரண்டு முரசுகளைச் சுமந்து கொண்டு "கவிச் சக்கரவர்த்தி கம்பர் வருகிறார் பராக்!" என்று சொல்வது போல முரசு கொட்டிக்கொண்டு சென்றது. பின்னால் இரண்டு ஒட்டகங்கள் நீல சில்க் ஜிப்பா போட்டுக் கொண்டு நிமிர்ந்த தலையுடன் கவிச்சக்கரவர்த்தியின் மெய்க் காப்பாளர்கள் போல ராணுவ நடை போட்டுக் கொண்டு நடந்தன. மத்தகஜத்தின் மீது கம்பரின் திரு உருவப் படத்தை வைத்திருந்தார்கள். கவிச் சக்கரவர்த்தியையே சுமந்துகொண்டிருக்கிறோம் என்ற பெருமையில் அந்த யானை யாரையுமே லட்சியம் செய்யாமல் ஒரு குன்றம் அசைவது போல ஆடி ஆடி அசைந்து அசைந்து நடந்தது.

நாதஸ்வர வித்துவான் குளிக்கரைப் பிச்சையப்பா பிள்ளையும் அவருடைய கோஷ்டியாரும் தெருவெல்லாம் இசை முழக்கம் செய்துகொண்டு சென்றார்கள்.

அவர்களுக்குப் பின்னால் மலர் மாலைகளால் அலங்கரிக்கப்பட்டிருந்த மஞ்சத்தில் கம்பராமாயணச் சுவடிகளை வைத்து ரோஜாப்பூ மாலைகளும் செவந்திப்பூ மாலைகளும் சூட்டித் தோளிலே சுமந்துகொண்டு வந்தார்கள். மஞ்சத்துக்கு இரு புறங்களிலும் காசித்தந்த பூச்சக்கரக் குடைகளையும் வெண்சாமரங்களையும் பார்க்கும்போது தமிழ்த்தாய் அரியாசனத்தில் அமர்ந்து பட்டணப் பிரவேசம் செய்வதுபோலவே இருந்தது.

ஊர்வலம் எழும்பூர் சின்னசெட்டித் தெரு, எழும்பூர் ஹைரோடு, ஹால்ஸ் ரோடு, கோமளீஸ்வரன் பேட்டை, மவுண்ட் ரோடு முதலான இடங்கள் வழியாக சுமார் இரண்டு மைல் தூரம் சுற்றிவந்து பத்து மணிக்கெல்லாம் ராஜாஜி ஹாலை வந்தடைந்தது.

ராஜாஜி ஹாலில் ரசிகமணியின் தலைமையில் மகாநாடு துவங்கியது. குளிக்கரை பிச்சையப்பா கோஷ்டியார் வாத்தியத்திலேதான் வாசிக்கிறார்களா, வாயினாலேயே பாடுகிறார்களா என்று சந்தேகப்படும் படியாக அட்சர சுத்தத்துடன் அரை மணி நேரம் கானவெள்ளம் பெருக்கினர். பிறகு 'பரிதிமாற் கலைஞ'ரின் பேரரான ஸ்ரீ வி. ஜி. சீனிவாசன், டாக்டர் திருமூர்த்தி, வித்வான் சொக்கலிங்கம், வித்வான் கேதாரீஸ்வர சர்மா ஆகியோர் கம்பர் பெருமையைப் பற்றிச் சொற்பொழிவு ஆற்றியதுடன் அன்றையக் காலை மகாநாடு முடிந்தது.

பிற்பகல் மூன்று மணிக்கு ஸ்ரீ வி. வி. சுப்பிரமணியம் கோஷ்டியாரின் இசையரங்கோடு மகாநாடு மீண்டும் ஆரம்பமாயிற்று.

ஸ்ரீமதி ராஜரத்தினம் அம்மையார், ஸ்ரீ அ. கி. பரந்தாமனார், ஸ்ரீ எம். செல்லம், ஸ்ரீமதி குகப்பிரியை, கல்கத்தா பாரதி சங்கத் தலைவர் ஸ்ரீ டி. எஸ். சீதாபதி, ஸ்ரீ வையாபுரிப் பிள்ளை, ஸ்ரீ அ. சீனிவாச ராகவன், ஸ்ரீ பி. ஸ்ரீ. ஆச்சார்யா, ஸ்ரீ அ. முத்தையா, ஸ்ரீமதி ஆர். வி. சாவித்ரி ஆகியவர்கள் கம்பரைப் பற்றிப் பிரசங்கமாரி பொழிந்தார்கள். ஆனால் ஒவ்வொரு பிரசங்கமாரியும் கண்டிப்பாகப் பத்து நிமிஷத்துக்குள் முடியுமாறு தலைவர் பார்த்துக் கொண்டார்.

பிரசங்கங்களுக்கு இடையே ஸ்ரீமதி என். கே. ராஜலக்ஷ்மியின் கச்சேரியும் பேபி வஸந்தாவின் நாட்டியமும் நடந்தது.

கவர்னர் ஜெனரல் ராஜாஜி அவர்கள் கம்பர் மகாநாட்டுக்கு அனுப்பியிருந்த ஆசிச் செய்தியை ஸ்ரீ டி. சதாசிவம் படித்த பிறகு ரசிகமணி அவர்கள் தம்முடைய முடிவுரையை நிகழ்த்தினார்கள். கம்பர் பிறந்த தேரழுந்தூரில் ஞாபகச் சின்னம் சீக்கிரத்திலேயே ஏற்படுமென்பது நிச்சயம் என்றும், அதற்கு நம் மந்திரிமார்கள் தக்க உதவி செய்வார்கள் என்றும் உறுதி கூறினார்கள்.

கம்பர் கழகக் காரியதரிசி ஸ்ரீ சோமசுந்தரம் இந்த மகாநாடு வெற்றிகரமாக நடப்பதற்கு ஒத்துழைத்து உதவிபுரிந்த ஒவ்வொருவருக்கும் தனித்தனியே நன்றி கூறினார்.

பிறகு ஒரு மணி நேரம் சங்கீத வித்வான் ஸ்ரீ என். வி. பார்த்தசாரதி அவர்களின் இசை விருந்து நடந்தது. விருந்தின் சுவையைப் பக்கவாத்தியம் வாசித்த பிடில் சேதுராமையாவும், மிருதங்கம் ராகவனும், கடம் வைத்தியநாதனும் அதிகப்படுத்தினார்கள். கம்பராமாயணச் செய்யுள்கள் இரண்டை ஸ்ரீ என். வி. பார்த்தசாரதி அழகிய ராகமாலிகையாகப் பாடினார்.

கம்பர் மகாநாடு இவ்வளவு சிறப்பாகவும் வெற்றிகரமாகவும் நடந்ததற்கு முக்கிய காரணஸ்தர்களாயிருந்த ஸ்ரீ நாரண துரைக்கண்ணன், ஸ்ரீ கே. சோமசுந்தரம், ஸ்ரீ தளவாய், ஸ்ரீ எஸ். பாஷ்யம், ஸ்ரீ ஆர். கணேசன் ஆகியவர்களுக்குத் தமிழன்பர்களின் சார்பாக நன்றி தெரிவித்து அவர்களை மனமார வாழ்த்துகிறேன்.

கம்பன் புகழ் வாழ்க!

கன்னித் தமிழ் வாழ்க!!

# அலை ஓசை

கல்கி

-சந்திரா-

## பதினெட்டாம் அத்தியாயம்

## “யார் அங்கே?”

சீதாவுக்குத் திடீரென்று தைரியம் பிறந்தது. சீ! குழாயிலிருந்து தண்ணீர் விழுந்தால் அதற்காகப் பயப்படுவதா? ஒரு வேளை தானே குழாயைத் திறந்துவிட்டு மறதியாக மூடாமல் வந்திருக்கலாம். ஆபீஸ் அறையில் கடிதம் எழுதிக் கொண்டிருந்தபோது அதைக் கவனியாமல் இருந்திருக்கலாம். இப்போது ஆபீஸ் அறையை விட்டு வெளியில் வந்ததும் சத்தம் கேட்கிறது. இந்தச் சின்ன விஷயத்துக்கு இவ்வளவு பயமா? சீதா தன்னுடைய அசட்டுத்தனத்தை நினைத்துத் தானே புன்னகை புரிந்து கொண்டாள். குழாயை நிறுத்தி விட்டுக் கொல்லைப்புறக் கதவையும் பார்த்து விட்டு வரலாம் என்று எண்ணிக் கொண்டு நடந்தாள்.

காலடி வைப்பதற்குள்ளே குழாய்த் தண்ணீரின் ஓசை நின்றது. அப்போது திடீரென்று ஏற்பட்ட நிச்சப்தம் சீதாவை முன்னைக் காட்டிலும் பன்மடங்கு பயங்கரத்தில் ஆழ்த்திற்று.

குழாயிலிருந்து தண்ணீர் விழும் ஓசை நின்றது என்றால், அதன் பொருள் என்ன? திறந்திருந்த குழாயை யாரோ திருகி மூடியிருக்க வேண்டும்! மூடியது யார்?

ஜன்னல் வழியாகப் பார்த்தபோது செடிகளுக்குள்ளே புகுந்து சென்ற முக்காடிட்ட உருவம் சீதாவுக்கு நினைவு வந்தது. கொல்லைப்புறமாக வந்து வீட்டுக்குள் நுழைந்து ஸ்நான அறைக்குள்ளே புகுந்திருக்க வேண்டும். அது யாராயிருக்கும்?

“யாராயிருந்தால்தான் என்ன? எதற்காக இப்படிப் பயப்படுகிறோம்?” என்று எண்ணிச் சீதா மறுபடியும் தன்னைத் தானே தைரியப்படுத்திக் கொண்டாள். ஒருவேளை வீட்டு வேலைக்காரிக்குப் புத்தி வந்து திரும்பி வந்தாலும் வந்திருக்கலாம். வாசல் வழியாக வர வெட்கப் பட்டுக் கொண்டு கொல்லைப்புறமாக வந்திருக்கலாம். ஆம்; அப்படித்தான் இருக்க வேண்டும்! இதற்காகவா இப்படி பயப்பட்டோம்!

நின்றிருந்த குழாய் மறுபடியும் தண்ணீரைக் கொட்ட ஆரம்பித்தது. சந்தேகத்தையும் கலக்கத்தையும் அதற்கு மேல் சீதாவினால் பொறுத்துக்கொள்ள முடியவில்லை. யாராயிருந்தாலும் சரி, போய்ப் பார்த்தே தீருவது என்று உறுதி கொண்டாள். தடுமாறிய கால்களைப் பலவந்தமாக இழுத்துக் கொண்டு ஸ்நான அறைக்குப் பக்கமாக வந்து சேர்ந்தாள். கதவு சாத்தி

யிருந்தது. ஆனால் உட்புறம் தாளிடவில்லை யென்று தெரிந்தது. நடுங்கிய கையினால் கதவை இலேசாகத் தட்டினாள். உள்ளே குழாய்ச் சத்தம் மறுபடியும் நின்றது. அந்த நிச்சப்தத்தில் சீதா "யார் அங்கே?" என்று கேட்டாள். கேட்டது சீதாதான்; ஆனால் அவளுக்கே அந்தக் குரல் தன்னுடையதாகத் தெரியவில்லை!

ஸ்நான அறைக்கு உள்ளே காலடிச் சத்தம் கேட்டது. ஒவ்வொரு தடவை கேட்ட காலடிச் சத்தத்துக்கும் ஒன்பது தடவை சீதாவின் நெஞ்சு அடித்துக் கொண்டது. ஒன்று, இரண்டு, மூன்று, நாலு, ஐந்து;—கதவு உட்பக்கமிருந்து திறந்து கொண்டது.

திறந்த வாசற்படி யருகில் ஓர் உருவம் நின்றது! அதன் கையில் ஒரு கத்தி வைத்துக் கொண்டிருக்கது.

இது என்ன பேயா, பிசாசா? அல்லது மனித ஜன்மந்தானா? இதன் முகத்தில் உள்ளவை கண்களா? அல்லது ஜொலிக்கும் கொள்ளிகளா? அல்லது சிவப்பு வர்ண எலெக்ட்ரிக் பல்புகளா?

இந்த உருவத்தை எங்கேயோ பார்த்திருக்கிறேனே? எங்கே? எங்கே? எப்போது?

ஐயோ! இது என்ன? தலையை ஏன் இப்படிச் சுற்றுகிறது? ஒன்றும் புரியவில்லையே! மூளை குழம்புகிறது என்பது இதுதானோ?

இங்கே வந்து நாம் நின்று எத்தனை நேரம் ஆயிற்று? இந்த உருவத்தைப் பார்க்கத் தொடங்கி எத்தனை நேரம் ஆயிற்று? ஒரு வருஷம் இருக்குமோ? ஆயிரம் வருஷம் இருக்குமோ! இந்த உருவம் ஏன் இப்படியே நின்றுகொண்டிருக்கிறது? ஏன் தன்னுடைய கொள்ளிக் கண்களால் நம்மை உற்றுப் பார்த்துக் கொண்டிருக்கிறது?-ஐயோ! மயக்கமாய் வருகிறதே!

இல்லை; மயக்கம் வரவில்லை. அறிவு தெளிவாய்த்தா னிருக்கிறது. கண்ணும் நன்றாய்த் தெரிகிறது. அதோ அந்த உருவம் புன்னகை புரிகிறதே! பேய் பிசாசு புன்னகை புரியுமா? அதோ! வாயைத் திறந்து பேசுகிறதே!

"சீதா! நான் யார் என்று தெரிகிறதா? ஞாபகம் வருகிறதா?"

இந்த வார்த்தைகள் காதில் விழுந்ததும் சீதாவுக்கு எல்லாம் ஞாபகம் வந்து விட்டது. சீ! இவள் பேயுமில்லை; பிசாசுமில்லை. பம்பாயில் தன் தாயார் படுத்த படுக்கையா யிருந்த சமயம் மர்மமாக வந்து ரத்தினமாலையும் இரண்டாயிரம் ரூபாயும் கொடுத்து விட்டுப் போன ஸ்திரீதான் இவள்! மனப்பிராந்தியினால் எப்படியெல்லாமோ தோன்றி விட்டது.

இவளை மறுபடி எங்கேயோ பார்த்தோமே? அது எங்கே?...... இதோ ஞாபகம் வருகிறது. இரண்டு மாதத்துக்கு முன்னால் இந்தச் சாலை திரும்பும் மூக்கில் மரத்தின் பின்னால் கையில் கத்தியுடன் நின்றதைப் பார்த்தோம்.

யாரிடமோ இவளைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோமே? ஆம்; தாரிணியிடம் பேசிக்கொண்டிருந்தோம். தாரிணி இவளுடைய வளர்ப்பு மகள். இவள் பெயர் ரஸியா பேகம்.

"சீதா! ஏன் இப்படி விழித்துக் கொண்டு நிற்கிறாய்? என்னைத் தெரிகிறதா, இல்லையா?"

சீதா மிக முயன்று வாயைத் திறந்து இரகசியம் பேசும் குரலில் "தெரிகிறது!" என்றாள்.

"தெரிகிறதா? நான் யார்?"

சீதா சிறிது யோசித்துத் தன்னுடைய கழுத்தில் அணிந்திருந்த இரத்தின மாலையைத் தொட்டு "இதைக் கொடுத்தவர்!" என்றாள்.

"ஆ! நீ நல்ல பெண்; ஞாபகம் வைத்துக் கொண்டிருக்கிறாய். வீட்டில் நீ மட்டும் தனியே யிருக்கிறாயா? வேறு யாரும் இல்லையா?" என்று அந்த ஸ்திரீ கேட்டாள்.

இந்தக் கேள்வி சீதாவின் காதில் விழவில்லை. ஏனெனில் அவளுடைய கண்ணும் கவனமும் அதற்குள் வேறொரு பொருளிடத்தில் சென்று விட்டன. அந்த ஸ்திரீயின் இடுப்பிலிருந்து தொங்கிய கைக்குட்டைதான் அந்தப் பொருள். அந்த வெள்ளைக் கைக்குட்டையில் ஒரு பாதிச் செக்கச் செவேலென்று இருந்தது.

அதைச் சீதா பார்த்து மிரள விழித்துக்கொண்டே "ஐயோ! இரத்தம், இரத்தம்!" என்று அலறினாள்.

திடீரென்று அவளுக்கு எப்படியோ விம்மலும் அழுகையும் கலந்து வந்தன.

ரஸியா பேகம் இரண்டு அடி எடுத்து முன்னால் வைத்துச் சீதாவை நெருங்கி வந்தான். அவளுடைய ஒரு தோளைப் பிடித்து ஒரு குலுக்குக் குலுக்கினான். பிறகு அவளை உற்றுப் பார்த்து, "இதோ பார், சீதா! நீ சமர்த்தாயிருப்பாய் என்று நினைத்தேன். எல்லாப் பெண்களையும் போல் மூடமாய்த்தானிருக்கிறாய். நீ அழுது கூச்சல் போட்டு, — இப்படி ஏதாவது பண்ணினாயோ, என்ன செய்வேன் தெரியுமா? சற்று முன்னால் சாலையில் ஒரு பைத்தியம் பிடித்த நாயை இந்தக் கத்தியினால் குத்திக் கொன்றேன். அது மாதிரி உன்னையும் கொன்று விடுவேன்!" என்றான்.

சீதாவின் விம்மல் உடனே நின்றது. இன்னமும் அந்தக் கைக்குட்டையைப் பார்த்துக்கொண்டு, "அது நாயின் இரத்தமா?" என்றாள்.

"ஆமாம்; உன்னை இது ரொம்பப் பயப்படுத்துகிறது போலிருக்கிறது! கொஞ்சம் இரு! குழாயின் அலம்பிக் கொண்டு வருகிறேன்."

இவ்விதம் சொல்லி விட்டு அந்த ஸ்திரீ குழாயடிக்குப் போய்த் தண்ணீரைத் திறந்து விட்டுக் கைக்குட்டையை நனைத்துக் கசக்கினான். ஆனால் கறை போகிற வழியாயில்லை.

"இதை நெருப்பிலே போட்டுக் கொளுத்த வேண்டியதுதான்!" என்று சொல்லிக் கீழே எறிந்து விட்டுத் திரும்பி வந்தான்.

சீதாவின் மனது இதற்குள் வேலை செய்து கொண்டேயிருந்தது. இவள் நாயைக் கொன்றதாகச் சொன்னது உண்மைதானா? அல்லது......நாயைக் கொன்றிருந்தால் எதற்காகக் கொல்லைப் புறமாக வந்தான்? நாம் இங்கே இருப்பது தெரிந்து வந்தானா? தற்செயலாக வந்தானா? திடீரென்று அவர் இப்போது வந்து விட்டால் என்ன செய்வது?.........அதற்குள் இவளை எப்படியாவது நல்ல வார்த்தை சொல்லிப் போகச் சொல்லிவிட வேண்டும்! இல்லாவிட்டால் என்ன ஆகுமோ, என்னமோ? கடவுளே! எதற்காக இந்த வீட்டுக்கு வந்து சேர்ந்தான்? வேறு எங்கேயாவது போயிருக்கக் கூடாதா!

அதற்குள் அந்த ஸ்திரீ சீதாவை நெருங்கி வந்து, "வீட்டில் நீ மட்டும் தனியாக இருக்கிறாயா? வேறு யாரும் இல்லையா?" என்று கேட்டான்.

"இப்போது தனியாகத்தான் இருக்கிறேன். ஆனால் அவர் சீக்கிரத்தில் வந்து விடுவார். சாயங்காலமே வந்திருக்கவேண்டும். ஏதனாலோ......"

"ஊரிலே எந்தப் பெண்பிள்ளையைச் சுற்றிக் கொண்டு அலைகிறானோ? யார் கண்டது? அயோக்கியன்!"

இந்த வார்த்தைகள் சீதாவின் இருதயத்தை ஊசியால் குத்துவது போலத் தைத்தன. பயங்கரமான பல சந்தேகங்கள் உதித்தன.

"என்ன சொல்கிறீர்கள்? உங்களுக்கு ஏதாவது தெரியுமா?" என்று நடுங்கிய குரலில் கேட்டாள்.

"சீ! அசடே! எனக்கு உன் புருஷனைப் பற்றி என்னமாய்த் தெரியும்? புருஷர்கள் எல்லாருமே அயோக்கியர்கள் என்று என் எண்ணம். அதனால் பொதுப்படையாகச் சொன்னேனே தவிர, உன்னுடைய புருஷனைப் பற்றிக் குறிப்பாகச் சொல்லவில்லை. உன் அபிப்பிராயம் என்ன? உன் புருஷன் எப்படி?"

"எப்படி என்றால், நான் என்னத்தைச் சொல்வது? மொத்தத்தில் நல்லவர் தான். ஆனால் கொஞ்சம் முன் கோபக்காரர். இந்த நிலையில் உங்களைப் பார்த்தால் ஏதாவது தொந்தரவாய் முடியலாம். அவர் வருவதற்குள்ளே நீங்கள்......" என்று சீதா மேலே சொல்லத் தயங்கினாள்.

"நீ சொல்வது எனக்குத் தெரிகிறது. உன் புருஷன் வருவதற்குள் நான் போய் விட்டால் நல்லது என்கிறாய். அப்படித்தானே? நல்ல புண்ணியவதி நீ! ஒரு வேளை சாப்பாடு போடக் கூட உனக்கு மனதில்லை!"

"ஐயோ! அப்படிச் சொல்லாதீர்கள். என் கலியாணத்துக்கு நீங்கள் செய்த உதவியைப் பற்றி எத்தனையோ தடவை எண்ணிப் பார்த்துக் கொண்டிருக்கிறேன். ஒரு வேளை சாப்பாடு தானா பெரிது? அவர் வந்து விட்டால் யார் இன்னார் என்று தெரிவிக்கும்படி

நேருமே என்று யோசித்தேன். பேஷா கச் சாப்பிட்டுவிட்டுப் போங்கள்."

"சீதா! எனக்குச் சாப்பாடு வேண்டாம். எத்தனையோ வருஷத்துக்குப் பிறகு இன்றைக்குத்தான் எனது மனது குளிர்ந்து வயிறும் நிறைந்திருக்கிறது. ஆனால் இன்று ராத்திரி நான் எங்கேயும் போக முடியாது. உடம்பு களைப்பாயிருக்கிறது. நன்றாகத் தூங்கிப் பல நாளாயிற்று. இன்று ராத்திரி இங்கே படுத்துத் தூங்கிவிட்டுத் தான் போக வேண்டும். யார் இன்றோர் என்று உன் புருஷனுக்குச் சொல்ல வேண்டியதில்லை. நான் இருப்பதே தெரிய வேண்டியதில்லை. இந்த வீட்டு மாடியில் அறை இருக்கிறதா?"

"அதுதானே இல்லை? இந்தப் புது டில்லியில் சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்குக் கட்டிக் கொடுத்திருக்கும் வீடெல்லாம் மாடியில்லாத வீடாக அல்லவா இருக்கிறது?"

அந்த ஸ்திரீ சுற்று முற்றும் பார்த்தாள். ஸ்நான அறைக்கு எதிர்ப்புறம் இருந்த அறையைச் சுட்டிக் காட்டி "அந்த அறையில் என்ன இருக்கிறது?" என்று கேட்டாள்.

"விறகு, கரி, தட்டு முட்டுச் சாமான்கள்" என்றாள் சீதா.

அறையை அந்த ஸ்திரீ திறந்து பார்த்துவிட்டு, "சரி! இதில் நான் படுத்துக் கொள்கிறேன். ஒருவருக்கும் தெரிய வேண்டாம். வெளிக் கதவை நீ பூட்டிக் கொண்டு விடு!" என்றாள்.

"இதில் எப்படிப் படுத்துக் கொள்வீர்கள்? காற்றே வராதே? சாமான்களைக் கன்னா பின்னாவென்று போட்டிருக்கிறதே!"

"பாதகமில்லை, சீதா! இதைக் காட்டிலும் எவ்வளவோ கேவலமான இடங்களில் நான் இருந்திருக்கிறேன்."

இதைக் கேட்ட சீதாவின் மனம் இளகிற்று. அந்த ஸ்திரீயின் வரலாறு எப்படியிருக்கும் என்று தான் கற்பனை செய்து கொண்டதெல்லாம் நினைவு வந்தது. வாழ்க்கையில் ரொம்பவும் கஷ்டங்களை அநுபவித்தவள் என்பதில் சந்தேகமில்லை. அந்தக் கஷ்டங்கள் அவளுக்கு ராஜவிபூர் ராஜாவினால் நேர்ந்திருக்க வேண்டும் என்பதும் நிச்சயம். ஆனால் அவை என்ன மாதிரி கஷ்டங்கள்?—அவளிடமே கேட்டுத் தெரிந்து கொள்ள ஆசையுண்டாயிற்று. அதற்கு இப்போது சாவகாசம் இல்லை. எந்த நிமிஷத்திலும் அவளுடைய கணவன் திரும்பி வந்து விடலாம். வந்தால், பைத்தியக்காரியைப் போல் தோன்றும் இவளைக் கட்டாயம் விரட்டி அடித்து விடுவார்.

"இதோ ஒரு ஜமக்காளமும் தலையணையுமாவது கொண்டு வந்து கொடுக்கிறேன்" என்று சொல்லி விட்டுச் சீதா விடுவிடு என்று உள்ளே போனாள். ஜமக்காளமும் தலையணையும் எடுத்துக் கொண்டு வந்தாள். இத்தனை நேரமும் அவளுடைய உள் மனது "எதையோ மறந்து விட்டோம். முக்கியமான விஷயம். அதை ஞாபகப்படுத்திக் கொள்ளவேண்டும்" என்று சொல்லிக் கொண்டேயிருந்தது. அது இப்போது நினைவு வந்தது. மறந்து போய் நினைவு வந்த விஷயம் தாரிணியின் கோரிக்கைதான்.

ஜமக்காளத்தையும் தலையணையையும் கொண்டு வந்து கொடுத்துவிட்டு, "நிச்சயமாகச் சாப்பாடு வேண்டாமா? பூரியும் சப்பாத்தியும் இங்கேயே கொண்டு வந்து கொடுக்கிறேனே; நீங்கள் சாவகாசமாகப் பசித்தபோது சாப்பிட்டுக் கொள்ளலாம்" என்றாள் சீதா.

"வேண்டாம், வேண்டாம். இன்று என்ன கிழமை? செவ்வாய்தானே?"

"ஆமாம்."

"செவ்வாய் இரவு நான் சாப்பிடும் வழக்கம் இல்லை. அப்படி விரதம். இன்றைக்கு நிச்சயமாய்ச் சாப்பிட மாட்டேன். இனிமேல் நீ போய் உன் காரியத்தைப் பார். உன் புருஷன் தினம் காலையில் எத்தனை மணிக்கு எழுந்திருப்பான்?"

"சாதாரணமாய் ஏழு மணிக்குத்தான். நான் ஆறு மணிக்கே விழித்துக் கொண்டு விடுவேன்."

"அப்படியானால், நீ எழுந்ததும் வந்து கதவைத் திறந்து விட்டுவிடு."

"நான் வருவதற்காக நீங்கள் காத்திருக்க வேண்டியதில்லை. இந்த அறைக்கு இன்னொரு கதவு இருக்கிறது. அது கொல்லைப்புறம் திறக்கும். இராத்திரி தான் போட்டுக் கொள்

ளுங்கள். காலையில் இஷ்டமான போது எழுந்து போகலாம்.''

"ரொம்ப நல்லதாய்ப் போயிற்று. உனக்கு எத்தனை குழந்தை?''

"ஒரே ஒரு குழந்தைதான்! வயது மூன்று ஆகப்போகிறது. வசந்தி என்று பெயர். இப்போதுதான் கால் மணிக்கு முன்னால் தூங்கினாள்.''

"வசந்தி சௌக்கியமாயிருக்கட்டும். புருஷர்களின் கொடுமைக்கு உள்ளாகாமல் இருக்கட்டும்.''

"நீங்கள் ரொம்பக் கஷ்டப்பட்டிருப்பீர்கள் போலிருக்கிறது.''

"ஆம்; அதைப்பற்றிச் சொல்ல இப்போது நேரமில்லை. நீ போய் உன் காரியத்தைப் பார்!''

"உங்களிடம் ஒரு விஷயம் கேட்க வேண்டும் என்று நினைத்தேன்.''

"சீக்கிரம் கேள். ரொம்ப அலுப்பாயிருக்கிறது. படுத்துக் கொள்ள வேண்டும்.''

"உங்கள் பெயர் என்ன?''

"என் பெயர் எதுவாயிருந்தால் என்ன இப்போது?''

"நீங்கள் சொல்லாவிட்டால் எனக்குத் தெரியாதா?''

"தெரிந்தால், சொல்லேன்.''

"ரஸியா பேகம்!''

வியப்புடனும் கோபத்துடனும் அந்த ஸ்திரீ சீதாவைப் பார்த்து, "உனக்கு யார் சொன்னது?'' என்று கேட்டாள்.

"அதை அப்புறம் சொல்கிறேன். உங்கள் பெயர் ரஸியா பேகமா, இல்லையா?'' என்றாள் சீதா.

"உண்டு, இல்லை இரண்டும். என்னுடைய பெயர் ரமாமணி. ஒரு காரியத்துக்காகச் சில காலம் ரஸியா பேகம் என்று மறு பெயர் வைத்துக் கொண்டேன். அதை யாரோ உனக்குச் சொல்லியிருக்கிறார்கள். சொல்லியது யாராக இருக்கும்? ஒருவேளை அந்த அசட்டுப் பிராமணர்தானோ?''

எந்த அசட்டுப் பிராமணரைக் குறிப்பிடுகிறாள் என்று சீதாவுக்குத் தெரியவில்லை. சட்டென்று, "வேறு யாரும் இல்லை. உங்கள் குமாரி தாரிணிதான் சொன்னாள்'' என்றாள்.

சீதா எதிர்பார்த்தது போலவே அந்த ஸ்திரீயைத் தூக்கி வாரிப் போட்டது.

சற்று நேரம் சீதாவை உற்றுப் பார்த்துவிட்டு, "நிஜமாகவா? தாரிணியா சொன்னாள்?'' என்று கேட்டாள்.

"ஆமாம்; தாரிணிதான்.''

"அவளை எங்கே பார்த்தாய்? எப்போது?''

"கொஞ்ச நாளைக்கு முன்பு ஆக்ராவுக்குப் போயிருந்தோம். அப்போது சந்தித்தோம்.''

"அப்புறம்?''

"ஆக்ராவிலிருந்து ரஜனிபூருக்குச் சென்றோம்.........''

அந்த ஸ்திரீயின் உள்ளத்தில் ஏதேனும் கொந்தளிப்பு ஏற்பட்டிருந்தால், அதை அவள் முகம் சற்றும் காட்டவில்லை. மரத்தினால் செய்த முகம் போல் ஆகிவிட்டது.

சீதா மேலும் சொன்னாள்: "ரஜனிபூரில் ஏதேதோ பேசிக் கொண்டிருந்தோம். தாரிணியை அவளுடைய அம்மா, அப்பா யார் என்று கேட்டேன். அப்போது தன்னை வளர்த்தவள் என்பதாக உங்களைப் பற்றிச் சொன்னாள். அவள் சொன்னதிலிருந்தும் எனக்குத் தெரிந்ததைக் கொண்டும் நீங்களாய்த்தானிருக்கும் என்று ஊகித்தேன்.''

"நீயும் தாரிணியும் ரொம்ப சிநேகமாகி விட்டீர்களா!'' என்று ரமாமணி என்கிற ரஸியா பேகம் கேட்டாள்.

"சிநேகமாகாமல் எப்படியிருக்க முடியும்? படகிலிருந்து நான் ஏரியில் விழுந்துவிட்டேன். தாரிணிதான் உடனே தண்ணீரில் குதித்து நீந்தி வந்து என்னைக் காப்பாற்றினாள்.''

ரஸியா பேகத்தின் முகத்தில் அப்போது சிறிது மலர்ச்சி காணப்பட்டது. "என் மகளே மகள்!'' என்று கொஞ்சம் குதூகலமாகவே கூறினாள்.

"மகளிடம் இவ்வளவு அருமை வைத்திருக்கிறீர்களே? ஆனால் சந்தித்து வருஷக் கணக்கு ஆயிற்றே? உங்களைக் கண்டால் உடனே தனக்குத் தெரிவிக்கும்படி சொல்லியிருக்கிறாள்.''

"தாரிணி இப்போது எங்கே இருக்கிறாள் தெரியுமா?"

"இந்த ஊரிலேதான் இருப்பதாகச் சொன்னாள். விலாசம்கூடத் தந்திருக்கிறாள். நாளைக் காலையில் சொல்லி அனுப்பட்டுமா? நீங்கள் இங்கேயே நாளைக்கும் இருந்து தாரிணியைப் பார்த்துவிட்டுப் போகலாமே? என் அகத்துக்காரரிடம் எல்லா விவரங்களையும் சொல்லிவிட்டால் போகிறது!"

ரஸியா பேகம் ஜமக்காளத்தையும் தலையணையையும் கீழே போட்டுவிட்டு, "சீதா! எங்கே? என் கைமேலே உன் கையை வை!" என்று அதட்டும் குரலில் கூறினாள்.

சீதா அவ்விதமே செய்தாள்.

"நான் இன்று இரவு இங்கு வந்ததைப் பற்றித் தாரிணியிடமாவது உன் புருஷனிடமாவது நீ சொல்லவே கூடாது. எந்தக் காரியத்தைக் கொண்டும் என்னைப் பற்றிப் பிரஸ்தாபிக்கவே கூடாது. அப்படி என் கையில் அடித்துச் சத்தியம் செய்து கொடு. இல்லாவிட்டால் பைத்தியம் பிடித்த நாயைக் கொன்றது போல் உன்னை இந்த நிமிஷமே கொன்று போட்டுவிடுவேன்" என்றுகூறி ரஸியா பேகம் இடுப்பில் செருகியிருந்த கத்தியை இடது கையினால் எடுத்துத் தூக்கிக் காட்டினாள். சற்று முன்னால் சிறிது அமைதி யடைந்திருந்த அவளுடைய முகத்தில் இப்போது மறுபடியும் கொலை வெறி கூத்தாடியது.

சீதா மிரண்டு போய் அப்படியே சத்தியம் செய்து கொடுத்தாள். இந்த வெறி பிடித்த ஸ்திரீயிடம் எதற்காக இவ்வளவு பேச்சுக் கொடுத்தோம் என்று தோன்றியது.

அந்தச் சமயத்தில் வாசலில் 'பாம்' 'பாம்' என்று மோட்டாரின் சத்தம் கேட்டது. அது அந்த வீட்டு மோட்டார் ஹாரனின் சத்தந்தான்.

"அவர் வந்து விட்டார். நீங்கள் சீக்கிரம் அறைக்கு உள்ளே போங்கள்!" என்றாள் சீதா.

"ஜாக்கிரதை! ஞாபக மறதியாகக் கூட என்னைப் பற்றிப் பேச்சு எடுக்காதே!" என்று சொல்லிக் கொண்டே ரஸியா பேகம் அந்தச் சாமான் அறைக்குள்ளே பிரவேசித்தாள்.

சீதா அந்த அறைக் கதவை இழுத்துப் பூட்டிவிட்டு ஒரு பெருமூச்சு விட்டாள். பிறகு வாசற் கதவைத் திறக்க விரைந்து சென்றாள்.

## பத்தொன்பதாம் அத்தியாயம்

# "ஹலோ! போலீஸ்!"

**வா**சற் கதவைத் திறந்ததும் சீதாவுக்கு மேலும் அதிசயமும் திகைப்பும் உண்டாகும் காட்சி தென்பட்டது.

வாசலருகில் அவர்கள் வீட்டுக் கார் வந்து நின்றது. அதன் முன் சீட்டில் மூன்று பேர் உட்கார்ந்திருந்தார்கள். அவர்கள் ஒவ்வொருவராகக் கீழே இறங்கினார்கள்.

இறங்கியவர்கள் சௌந்தரராகவனும் தாரிணியும் சூரியாவும்.

இந்த மூன்று பேரும் முன்ஸீட்டில் நெருக்கியடித்துக் கொண்டு உட்கார்ந்து வந்திருக்கிறார்கள் என்னும் விஷயம் சீதாவின் மனத்திரையில் புகைப் படத்தைப்போல் பதிந்தது.

உடனே, காரின் பின்பகுதிக்குச் சீதாவின் கவனம் சென்றது. அதில் ஏதோ ஒரு நீள வாட்டமான மூட்டை கிடந்தது. அது மூட்டைதானா? அல்லது...?

ஏற்கெனவே கலக்க மடைந்திருந்த சீதாவின் உள்ளம் பதைபதைத்தது; உடம்பு நடுங்கிற்று.

வந்தவர்களை வரவேற்கவேண்டும் என்கிற கடமை சீதாவுக்கு ஞாபகம் வந்தது. அவர்கள் வாசற்படியை நோக்கி வந்து கொண்டிருந்தார்கள். அவர்களுடைய முகங்களை வீதி விளக்கின் மங்கிய வெளிச்சத்தில் சீதா பார்த்தாள். ஏன் இவர்கள் இப்படி இருக்கிறார்கள்? எதற்காக முகங்களை இப்படி வைத்துக் கொண்டிருக்

கிறார்கள்? எதையோ பறிகொடுத்தவர்களைப்போல் ...... இல்லை, இழவு வீட்டுக்கு வருகிறவர்களைப் போல் வருகிறார்களே! ஏன்? தன்னுடைய முகத்தை ஏன் ஒருவராவது ஏறிட்டுப் பார்க்கவில்லை?

"கொஞ்சம் நகர்ந்து வழியை விடு! ஏன் வாசற்படியில் நிற்கிறாய்?" என்று கேட்டுக்கொண்டே ராகவன் முதலில் வீட்டுக்குள் வந்தான். அவனுடைய குரல் சீதாவுக்கு விசித்திரமாகத் தொனித்தது. அது வழக்கமான கோபக்குரல் இல்லை; அருவருப்பும் அவசரமும் கலந்த குரல். வரும்போதே எதற்காக இப்படி எரிந்து விழுந்து கொண்டு வருகிறார்?

சீதா சற்று ஒதுங்கி நின்றாள். அடுத்தாற்போல் தாரிணி வந்தாள். அவளிடம் ஏதாவது பேசி வரவேற்க வேண்டும் என்று சீதா நினைத்தாள். ஆனால் அவளுடைய முகத்தோற்றம் வரவேற்புச் சொல்வதற்கு உகந்ததாக இல்லை. மேலும் தாரிணி சம்பந்தமான இரண்டு எண்ணங்கள் சீதாவின் மனதில் அலை மோதிக்கொண்டு கிடந்தன. ஒன்று அவளுடைய தாயார் அல்லது வளர்ப்புத் தாயார் அந்த வீட்டின் பின்பக்கத்து அறையொன்றில் அப்போது இருக்கிறாள் என்பது. இரண்டாவது எண்ணம், காரின் முன் பகுதியில் ராகவனுக்கும் சூரியாவுக்கும் மத்தியில் வெட்கமில்லாமல் உட்கார்ந்துகொண்டு தாரிணி வந்தாள் என்பது. இத்தகைய மனோ நிலையில் தாரிணியை என்ன சொல்லி வரவேற்பது என்று சீதா யோசிப்பதற்குள் தாரிணி அவளைத் தாண்டி விரைவாக உள்ளே போய்விட்டாள்.

அப்புறம் சூரியா வந்தான். சீதாவுக்கு அவனிடம் பேசுவதில் தடங்கல் ஒன்றும் இருக்கவில்லை.

"அம்மாஞ்சி! இது என்ன? எல்லாரும் எங்கே யிருந்து வருகிறீர்கள்? எதற்காக இப்படி முகத்தைப் பயங்கரமாக வைத்துக் கொண்டிருக்கிறீர்கள்? ஏதோ கொலை செய்துவிட்டு வருகிறவர்களைப் போல வருகிறீர்களே?" என்றாள்.

கொலை என்ற வார்த்தையைக் கேட்டதும் சூரியா திடுக்கிட்டுச் சீதாவை ஏறிட்டுப் பார்த்தான். அடங்கிய குரலில், "ஒரு பயங்கரமான விஷயம், அத்தங்கா! முதலில் உள்ளே போவோம். பிறகு எல்லாம் சாவகாசமாகச் சொல்கிறேன்" என்றான்.

மறுபடியும், "நாங்கள்தான் இப்படி வந்திருக்கிறோம் என்றால், உன்னுடைய முகம் ஏன் இப்படி யிருக்கிறது? உனக்கு உடம்பு ஒன்றும் இல்லையே?" என்று கேட்டான்.

"எனக்கா? உடம்பு ஒன்றுமில்லை. ஆனால் மனதுதான் சரியாயில்லை. இவர் என்னைத் தனியாக விட்டு விட்டுப் போய் இத்தனை நேரம் கழித்துத் திரும்பி வந்தால் என்ன சொல்கிறது? சூரியா! இத்தனை நாளாக நீ ஏன் இந்தப் பக்கமே எட்டிப் பார்க்கவில்லை?......இந்த மனுஷியை எங்கே கண்டு பிடித்தீர்கள்?"

"தாரிணியைக் கேட்கிறாயா, சீதா! அவள் என்னைப் பார்ப்பதற்காக என் அறைக்கு வந்திருந்தாள். அந்தச் சமயம் ராகவனும் வந்தார். தாரிணி உன்னைப் பார்க்கவேண்டும் என்று சொன்னாள். மூன்று பேருமாக வந்தோம்."

"மூன்றுபேரும் வந்த இலட்சணத்தைத்தான் பார்த்தேனே! இவளுக்கு, தான் பெண்ணாய்ப் பிறந்தவள் என்பதே நினைவிராதுபோ லிருக்கிறது!"

சூரியா வியப்புடன் சீதாவைப் பார்த்தான். "அத்தங்கா! அதைப் பற்றி யெல்லாம் பேசுவதற்கு இப்போது சமயம் இல்லை. ஒரு பயங்கரமான சம்பவம் நடந்திருக்கிறது. உள்ளே வா, சாவகாசமாய்ச் சொல்லுகிறேன்!" என்றான்.

சீதாவும் சூரியாவும் 'டிராயிங் ரூம்' என்று வழங்கிய வீட்டின் பிரதான அறைக்குச் சென்றபோது, அங்கே ராகவன் டெலிபோனுக்குப் பக்கத்தில் ரிஸீவரைக் கையில் எடுத்துக் கொண்டு நின்றான். தாரிணி ஒரு சோபாவில் உட்கார்ந்திருந்தாள். அவளுடன் ஏதாவது பேசலாம் என்று நினைப்பதற்குள் "சீதா! குழந்தை என்ன செய்கிறாள்? தூங்கிப் போய் விட்டாளா?" என்று ராகவன் பதட்டத்துடன் கேட்டான்.

இந்தச் சமயத்தில் ஆபீஸ் அறைக்குள்ளிருந்து "அப்பா! அப்பா!" என்று குழந்தையின் குரல் கேட்டது.

"இத்தனை நேரம் தூங்கிக் கொண்டிருந்தாள். உங்கள் குரலைக் கேட்டு விழித்திருக்கிறாள். தூக்கத்திலேகூட அப்பா ஞாபகந்தான் குழந்தைக்கு!" என்றாள் சீதா.

"சரி, சரி! உன் பெருமையை அப்புறம் அடித்துக் கொள்ளலாம். உடனே போய் அவளை மறுபடியும் தூங்கப் பண்ணு. அப்பா இதோ வந்து விடுவார் என்று சொல்லு. அவள் இப்போது இங்கே வரக் கூடாது. தெரிகிறதா? போ! சீக்கிரம்!"

ராகவனுடைய குரலிலிருந்தும் பதட்டத்திலிருந்தும் ஏதோ ரொம்ப முக்கியமான விஷயந்தான் என்று சீதா அறிந்தாள். அவனுடைய சொற்படி ஆபீஸ் அறைக்குள் சென்றாள்.

"அப்பா வந்துத்தாரா, அம்மா!" என்று வஸந்தி கேட்டாள்.

"வந்துட்டார், வஸந்தி! உன் பக்கத்திலேதான் வந்து படுத்துக் கொள்வார். நீ தூங்கு!" என்று சீதா குழந்தையின் முதுகைத் தட்டினாள்.

"அப்பா கோவமா வந்திருக்காரா, அம்மா!" என்று குழந்தை கேட்டாள்.

அவ்வளவு மனக் குழப்பத்துக்கிடையிலும் வஸந்தியின் கேள்வி சீதாவுக்குச் சிரிப்பை உண்டாக்கிற்று.

"அதெல்லாம் ஒன்றுமில்லை, வஸந்தி! இன்னும் யாரோ வந்திருக்கிறார்கள். அவர்களுடன் பேசிக் கொண்டிருக்கிறார். நீ பாட்டுக்கு நிம்மதியாகத் தூங்கு!" என்றாள்.

ஒரு நிமிஷத்துக்குள் குழந்தை தூங்கிப் போய்விட்டாள். சீதா திரும்ப டிராயிங் அறைக்கு வந்தாள்.

ஒருவேளை மூன்றுபேரும் சாப்பிடாமல் வந்திருப்பார்களோ, என்னமோ? எல்லாருக்கும் எப்படிச் சாப்பாடு தயாரிப்பது? இந்தச் சமயம் பார்த்து வேலைக்காரன், வேலைக்காரி இரண்டு பேரும் போய்விட்டார்களே?—என்று எண்ணமிட்டுக் கொண்டு வந்தாள்.

அப்போது ராகவன் டெலிபோனில் பேசிக் கொண்டிருந்தான்.

"ஹலோ! போலீஸ் ஸ்டேஷன்? அங்கே யார்? நான் பி. எல். எஸ். ராகவன் பேசுகிறது. இவ்விடத்தில் ஒரு 'ஆக்ஸிடெண்ட்' நடந்திருக்கிறது. 'ஸீரியஸ் ஆக்ஸிடெண்ட்.' இல்லை, கார் ஆக்ஸிடெண்ட் இல்லை. ஒரு வேளை கொலையாக இருக்கலாம் என்று,......ஆமாம், 'மர்டர்' என்று சந்தேகமாயிருக்கிறது.........உடனே யாராவது அனுப்ப வேணும்!........ ரொம்ப தாங்க்ஸ்!"

டிராயிங் ரூம் வாசற்படியில் நின்றபடி சீதா இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்தாள். டெலிபோன் பேச்சு முடிந்ததும் அறைக்குள் வந்தாள். யாரும் அவளிடம் எதுவும் பேசுகிற வழியாகக் காணவில்லை. ஒருவரும் அவளுடைய முகத்தை ஏறிட்டுப் பார்க்கவும் இல்லை. கனவிலே நடக்கிறவளைப்போல் நடந்துபோய்த் தாரிணியின் பக்கத்தில் உட்கார்ந்தாள். தாரிணியின் தாயார் அந்த வீட்டின் பின் கட்டில் அப்போது இருப்பது, அவள் கையில் கத்தியுடன் வந்தது, இரத்தம் தோய்ந்த கைக்குட்டையை அலம்பியது—எல்லாம் நினைவு வந்தது. ஏதாவது பேசாவிட்டால் பைத்தியம் பிடித்துவிடும் போலத் தோன்றியது.

"அக்கா! இது என்ன சமாசாரம்? எதற்காகப் போலீஸைக் கூப்பிடுகிறார்?" என்று சீதா கேட்டது கீச்சுக் குரலில் 'கிறீச்' என்று ஒலித்தது.

அப்போதும் தாரிணி ஒன்றும் பதில் சொல்லவில்லை. அவள் பிரமை பிடித்தவள்போலக் காணப்பட்டாள்.

ராகவன் குறுக்கிட்டு, "சீதா! சற்று நேரம் வாயை மூடிக் கொண்டிரு! எல்லாம் தானே தெரியும். இந்தச் சமயம் 'ஹிஸ்டீரியா' வரவழைத்துக் கொள்ளாதே! அப்படி ஏதாவது ரகளை செய்தாயோ, நானே இன்றைக்கு ஒரு கொலை செய்தாலும் செய்து விடுவேன்!" என்றான்.

சீதா நடுநடுங்கினாள்.

ராகவன் சூரியாவைப் பார்த்து, "வா! சூரியா! நாம் வாசலில் போய் நிற்போம்! போலீஸ்காரர்கள் இப்போது வந்து விடுவார்கள்!" என்றான்.

# போதும் போதும், பழைய கதை!

ரஜனி

கொழும்பு, அக், 2.

இலங்கை இந்தியர்களின் பிரஜா உரிமைகளைப் பற்றி இரு தேச அரசாங்கங்களுக்கு மிடையில் நடைபெற்று வந்த சமரசப் பேச்சுகள் முடிவுக்கு வந்து விட்டனவாம். பண்டித நேரு கேட்ட வாக்குறுதியை அளிப்பதற்கு ஸ்ரீ சேனநாயகா சம்மதித்து விட்டதாயும், ஆகையால் இலங்கை அரசாங்கம் தயாரித்திருக்கும் இந்தியர் பிரஜா உரிமை நகல் மசோதாவைப் பண்டித நேரு அப்படியே ஏற்றுக்கொண்டு விட்டாரென்றும், நவம்பர் 23-ம் தேதி இந்த மசோதா சட்டமாக்கப்பட்டு விடுமென்றும் உயர்தர ராஜ்ய வட்டாரங்களில் பேச்சுகள் அடிபடுகின்றன.

இலங்கைப் பார்லிமெண்டில் ஏற்கனவே நிறைவேறிச் சட்டங்களாகி விட்ட இலங்கைப் பிரஜா உரிமைச் சட்டம், குடியேற்ற வெளியேற்றச் சட்டம் ஆகியவைகளின் படியும் இந்தியர்களுக்காக வென்று பிரத்யேகமாகக் கொண்டுவரப்பட விருக்கும் இந்தியர் பிரஜா உரிமைச் சட்டத்தின்படியும் இரண்டு மாதிரிப் பிரஜைகள் சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறார்கள். ஒன்று சிங்களவர்களும் யாழ்ப்பாணத் தமிழர்களு மடங்கிய வம்சாவளிப் பிரஜைகள்; மற்றொன்று பிரஜா வுரிமை பெறுவதற்குரிய யோக்யதாம்சங்களை ருசுப்படுத்தி இலங்கைப் பிரஜைகளாகப் பதிவு செய்து கொள்ளும் 'ரிஜிஸ்டர்ட்' பிரஜைகள்.

## நிலைக்குதவாத வாக்குறுதி

இந்த இரண்டு 'ஜாதி'ப் பிரஜைகளுக்கு மிடையில் வருங்காலத்தில் இயற்றும் சட்டங்களிலே வேற்றுமை கற்பிக்கக் கூடாதென்றும், இரு கோஷ்டியாரையும் ஒரே விதமாக நடத்த வேண்டுமென்றும் பார்லிமெண்டில் இந்தியத் தலைவர்கள் வற்புறுத்தியபொழுது மந்திரிகள் முடியாதென்று கைவிரித்து விட்டார்கள். இப்பொழுது பண்டித நேருவின் வற்புறுத்தலுக் கிணங்க வருங்காலச் சட்டங்களிலே 'ரிஜிஸ்டர்ட்' பிரஜைகளை வம்சாவளிப் பிரஜைகளைப் போலவே நடத்துவோமென்று வாக்குறுதி கொடுக்க ஸ்ரீ சேனநாயகா சம்மதித்திருக்கிறாராம்.

ஸ்ரீ சேனநாயகாவிட மிருந்து இவ்வித வாக்குறுதி பெறுவது பிரச்னையைத் தீர்க்கச் சரியான பரிகாரமாக மாட்டாது. சட்டத்தில் ஆயிரம் கோணல்கள் இருக்கும்போது அவற்றிற் கெல்லாம் ஒரு தனி மனிதரின் வாக்குறுதி பரிகாரமாகிவிடாது. ஸ்ரீ சேனநாயகா சிரஞ்சீவி யல்ல. அவருடைய அரசாங்கமும் சாசுவதமானதல்ல. சேனநாயகாவின் வாக்குறுதிகளில் ஏமாந்து விட இலங்கை இந்தியத் தலைவர்கள் இம்முறை கண்டிப்பாகத் தயாரில்லை. நியாயம், அநியாயமென்பதை யெல்லாம் கவனியாமல் ஏதாவது ஒரு விதமான உடன்படிக்கையைச் செய்து முடித்து விட வேண்டுமென இந்திய அரசாங்கப் பிரதிநிதி ஸ்ரீ கிரி விரும்புகிறாரென்று இங்குள்ள இந்தியர்களிடையே வெளிப்படையாகப் பேசிக் கொள்ளப் படுகிறது.

குடிப்பழக்கத்தையும் குதிரைப் பந்தயத்தையும் ஒழிக்க வேண்டுமென்று சொல்லும் ஒரு அரசாங்கத்தின் வர்த்தகக் கமிஷனரைப் பீப்பாய் பீப்பாய்களாகக் குடிக்கும் 'கிளப்'புகளிலும், அவரது பெயரைக் குதிரைப் பந்தயச் சங்க அங்கத்தினர்களின் ஜாபிதாவிலும் காண்பதும், இந்தியத் தலைவர்கள் விரும்பாத ஒரு உடன்பாட்டை இந்திய ஹைகமிஷனர் திணிக்க முயற்சிப்பதும் இந்திய அரசாங்கத்தினிடமோ அல்லது இலங்கையிலுள்ள அதன் பிரதிநிதிகளிடமோ ஏழைத் தொழிலாளரின் நம்பிக்கையை வளர்க்க உதவமாட்டாது.

## தொழிலாளரின் நம்பிக்கை

கவர்னர் ஜெனரல் ராஜாஜிக்கு இலங்கை இந்தியர்களின் பிரச்னைகள் நன்றாகத் தெரியும். இங்குள்ள தொழிலாளரில் 100-க்கு 100 பேர் தமிழர்கள். தமிழரின் நிலைமையை அவர்களுடன் அளவளாவிய தமிழரைப்போல மற்றவர்கள் அவ்வளவு சுலபமாக உணர்ந்து கொள்ள முடியாது. எனவே இலங்கை இந்தியர்களின் கஷ்டநஷ்டங்கள் ராஜாஜியின் கவனத்துக்கு வந்திருக்குமென்றும், அநியாயமான உடன்பாடு எதற்கும் அவர் ஒரு போதும் உடன்படமாட்டாரென்றும் தொழிலாளரிடையில் நம்பிக்கை இருந்து வருகிறது.



# கனவு பலிச்சுது!

கனவு பலிக்கப் போச்சுது!
கள் ஒழிஞ்சுப் போச்சுது!

காந்திமகான் — ராஜாஜியின்
கனவு பலிக்கப் போச்சுது!



கள்ளுக்கடை ஒழிஞ்சு நம்ம
காசுமிச்ச மாச்சுது
பிள்ளைக்குட்டி பெண்டாட்டியைப்
பிடிச்சசனியன் போச்சுது! (கனவு)

ஆசையோடு கட்டிக்கிட்ட
அத்தைமவ கையிலே
காசையெடுத்துக் கொடுத்து அவ
கண்கலங்க வைக்கணும்! (கனவு)

வேலைதேடிப் போனநேரே
வீடுவந்து சேரணும்
சேலைவாங்கிக் கொடுத்து அவ
சிரிச்சமுகத்தைப் பார்க்கணும்! (கனவு)

கம்மல்வாங்கிக் காதில்போட்டுக்
கண்சிமிட்டி நிக்கணும்
பொம்மியம்மா போல அவ
போகவரப் பார்க்கணும்! (கனவு)

ஏத்தம்போட்டுப் பாடித்தண்ணி
இறைச்சகளைப்புத் தீரவே
காத்தாடக் கடற்கரைக்குக்
கைகோத்துச் செல்லணும்! (கனவு)









# கள் ஒழிஞ்சுது!



கல்லுமிட்டாய் வாங்கிஅவ
கைநிறையக் கொடுக்கணும்
மெல்லக் கடி!'' என்றுசொல்லி
மெதுவாகக் கிள்ளணும்! (கனவு)

வாசமுள்ள ரோசாப்பூவை
வாங்கிவந்து நித்தநித்தம்
பாசமுடன் சூட்டிவிட்டுப்
பார்த்துமனம் களிக்கணும்! (கனவு)

வெள்ளைவேட்டி கட்டிக்கையை
வீசிவீசி நடக்கணும்
பிள்ளையைப் படிக்கவைக்கப்
பள்ளிக்கூடம் அனுப்பணும்! (கனவு)

வேறு

எண்ணாத எண்ணமெல்லாம்
எண்ணிமனம் துள்ளறப்போ
புண்ணான நெஞ்சம்ஏனோ
போனதைத்தான் நினைக்குது!

பண்ணாத பாவமென்ன
பாவிமவன் செய்தேனோ?
கண்ணான காந்தி இந்தக்
காட்சிகாண இல்லையே!

—விந்தன்.



# மகுடி



❀ தூரன் ❀

ஆற்றுப் படுகையிலே கூடாரம் போட்டிருந்தார்கள் கழைக் கூத்தாடிகள். மாலையில் ஊருக்குள்ளே வந்து ஆட்டம் நடத்துவார்கள்; பகலில் கூடாரத்தில் வித்தை பழகுவார்கள்.

"உன்னைப் பார்த்தால் கழைக்கூத்தாடிச்சியாகவே தெரியவில்லையே!......இப்படி நடுங்குகிறாயே?" என்று கீழே நின்ற வஸ்தாரி சிரித்துக் கொண்டே சொன்னான்.

கம்பியிலே நடந்து பழகிக் கொண்டிருந்த அமினாவைப் பார்த்துத்தான் அவன் அப்படிச் சொல்லிச் சிரித்தான்.

அமினாவுக்கு வெட்கமும் கோபமும் பொத்துக் கொண்டு வந்தது. வஸ்தாரி என்ன சொன்னாலும் அவள் பொறுத்துக் கொள்ளக் கூடியவள்தான்—அவன்மீது அவளுக்கு அவ்வளவு பிரேமை; அவனுடைய பயில்வான் வித்தைகளிலே அவ்வளவு மதிப்பு வைத்திருந்தாள் அவள். ஆனாலும் அவன் கேட்டானல்லவா, 'நீ பரம்பரைக் கூத்தாடிச்சியா?' என்று! — அதுதான் அவளுக்கு வேதனையாயிருந்தது.

வாஸ்தவம்தான்-அவள் தகப்பன் கழைக் கூத்தாடவில்லை; பாட்டன் கழைக்கூத்தாடவில்லை; மூப்பாட்டனும் கழைக்கூத்தாடவில்லை. அவள் முன்னோர்கள் எல்லோரும் பாம்பாட்டிகள். பாம்பாட்டி ஜாதி கழைக்கூத்தாடி ஜாதியைக் காட்டிலும் எந்த விதத்திலும் தாழ்ந்ததல்ல என்பது அவளுடைய திடமான அபிப்பிராயம். ஆனால் இந்த விஷயத்தில்தான் அடிக்கடி வஸ்தாரி அவளுடன் சண்டைக்குவருவான்.

சிரித்து விளையாடிக் கொண்டிருக்கும் போதே அவர்களுக்குள் சண்டை வந்து விடும். இருவரும் பரம்பரை வழி, வம்ச வழிகளையெல்லாம் எடுத்துத் திட்ட ஆரம்பித்து விடுவார்கள். அவர்கள் இருவரும் புரியாத தெலுங்கு பாஷையிலே பேசிக்கொள்வது கேட்பவர்களுக்கு ரஸமாய்த்தான் இருக்கும்.

ஊரிலுள்ள சிறுவர்களெல்லாம் ஆற்றுப் படுகையிலே போட்டிருக்கும் கூடாரத்தைச் சுற்றித்தான் சதாகாலமும் திரிவார்கள். அந்தக் கூடாரத்தைச் சுற்றிலும் கழிகள், கம்பங்கள், கம்பிகள், தமுக்கு, தண்டோரா, கத்தி, சட்டி, கடப்பாரை ஆகியவை கிடக்கும். ஓர் ஆடு, இரண்டு நாய்கள், நாலைந்து கோழிகள், ஒரு கீரிப்பிள்ளை—இவைகளும் இருந்தன. இவை யெல்லாம் பரம்பரையாக, வஸ்தாரியின் தகப்பன், பாட்டன், மூப்பாட்டன் காலத்திலிருந்து வந்த சொத்துக்கள். இவை தவிர அமினா கொண்டு வந்திருந்த பாம்புப் பெட்டியும் மகுடியும் இருந்தன.

* * *

இரண்டு மூன்று மாதங்களுக்கு முன்னால் ஒரு கிராமத்திலே கழைக்கூத்து ஆடிவிட்டு மூட்டை முடிச்சுகளுடன் அடுத்த ஊருக்குப் போய்க் கொண்டிருந்தபோது, நடுக்காட்டிலே ஒரு பெண்ணின் அழுகுரலைக் கேட்டான் வஸ்தாரி. 'என்னடா இது! யார் இப்படி அழுகிறது!' என்று போய்ப் பார்த்தான். அங்கே அமினா நின்று கொண்டிருந்தாள். பக்கத்திலே அவள் தகப்பன் விழுந்து கிடந்தான். அவன் உடம்பில் உயிர் இல்லை.

"என்ன அம்மா, நீ யார்? இவர் யார்? என்ன சேதி?" என்று வஸ்தாரி அவளை விசாரித்தான்.

"இவரு எங்க அப்பா! இங்கே ஒரு பாம்பு இருந்தது. அதைப் பிடிக்கிறதற்கு வந்து மகுடி வாசித்துக் கொண்டிருந்தாரு. நல்ல பாம்பென்றால் மகுடிக்கு மயங்கிப் படம் எடுத்து ஆடும். இது கருநாகம். அதுதான் கடித்து விட்டது; உடனே இறந்து போயிட்டாரு!" என்று அழுது கொண்டே சொன்னாள் அமினா.

வஸ்தாரிக்கு மனசு கேட்கவில்லை. "பயப்படாதே, அம்மா! நான் பார்த்துக் கொள்கிறேன், உன்னை!" என்று தேறுதல் சொன்னான்.

பிறகு இருவரும் சேர்ந்து அந்தப் பெரியவரை அடக்கம் செய்தார்கள்.

அன்றிலிருந்து அமினாவைக் கைவிடவில்லை. அவளை அழைத்துக் கொண்டு ஊர் ஊராகப் புறப்பட்டான். அமினாவின் பெட்டிக்குள்ளே இரண்டு நல்ல பாம்புகள் இருந்தன. வெகு நாட்களாகப் பழக்கப்பட்ட பாம்புகள் அவை; விஷப் பற்கள் எடுக்கப்பட்டவை. அவற்றை மகுடி ஊதி அமினா ஆட வைப்பாள். இது வஸ்தாரிக்கு உற்சாகத்தைக் கொடுத்தது. முதல் முதலாகத் தமுக்கை எப்படி அடிப்பதென்பதைப் பழக்கிக் கொடுத்தான் அவளுக்கு. பிறகு நாட்டியம் கற்றுக் கொடுத்தான். அதற்கப்புறம் உடம்பை வில்லாக வளைக்கவும் கழை மீது ஏறிச் சுழலவும் பழக்கிக் கொடுத்தான்.

அமினா சாமான்யமானவ ளல்ல. அவள் அழகும் படபடத்த பேச்சும் துடிதுடிக்கும் கண்களும் வஸ்தாரிக்குத் தேவாமிர்தமா யிருக்கும். ஒவ்வொரு வித்தையையும் வெகு எளிதில் கற்றுக் கொள்வாள் அமினா. அவள் கைகளைப் பிடித்துத் தூக்கி ஆகாயத்தில் வீசுவான் வஸ்தாரி. அவள் ஆகாயத்திலேயே ஒரு தரம் தலை கீழாய்ச் சுற்றி நிமிர்ந்து அவன் தோள்களில் வந்து 'ஜம்' மென்று நிற்பாள்.

புலியின் பாய்ச்சலும் மானின் மிரளலும் நல்ல பாம்பின் வளைவு நெளிவுகளும் அமினாவிடம் அமைந்து விட்டன. அவள் கூட்டத்தின் நடுவில் சாதாரணமாகச் சிரித்துக் குதித்து நின்றாலே புளியம்பழம் உதிர்வதுபோலக் கரகோஷம் எழும்; ஒரு நிமிஷத்திலே தட்டு நிறையச் சில்லறையாகச் சேர்ந்துவிடும்.

## 2

அன்று அமினாவுக்குத் தந்திக் கம்பிமீது நின்று கொண்டு புது விதமான வித்தை செய்யக் கற்றுக் கொடுத்துக் கொண்டிருந்தான் வஸ்தாரி. அவளுக்கு அந்த வித்தையைக் கற்றுக்கொள்வது கொஞ்சம் சிரமமாயிருந்தது. வஸ்தாரி பொறுமை யிழந்து, "நீ பரம்பரைக் கூத்தாடிச்சியா, என்ன?" என்று கேட்டு விட்டான். சுற்றி நின்ற சிறுவர்கள் 'ஓகோ' என்று சிரித்து விட்டார்கள்.

அமினாவுக்கு மனதில் இது சுருக்கென்று தைத்தது. பதிலுக்குப் பதில் சுடச்சுடக் கேட்டாள்;

"நீ இவ்வளவு கேவலமாய்ப் பேசுகிறாயே, இந்த மகுடியை எடுத்து ஊது, பார்க்கலாம்! ஒரு எடுப்பு எடுக்கத் தெரியுமா, உனக்கு?" என்று கேலி செய்தாள்.

அன்று முதல் வஸ்தாரிக்கு ரோசம் பிறந்துவிட்டது. "பூ! இதுதானா பிரமாதம்!" என்று மீசையைத் திருகி விட்டுக் கொண்டான். "இதோ பார், ஒரு நிமிஷத்திலே படித்து விடுகிறேன்!" என்று தனது முறுக்கேறிய தோள்களைக் கைகளால் தட்டிக் கொண்டான்.

முதலில் வஸ்தாரிக்கு மகுடியை எப்படிப் பிடிப்பதென்றே தெரியவில்லை. விரல்களை எப்படி அசைப்பதென்றும், துளைகளை எவ்



வாறு அடைத்துத் திறப்பதென்றும் அவனுக்கு விளங்கவில்லை. மெதுவாக 'கீர், பூர்' என்றும் 'கீச், கீச்' என்றும் சத்தம் கேட்கும்; பலமாக ஊதினால் அடுப்பு ஊதுவது போல் கர்ணகடூரமாயிருக்கும். அமீனு விழுந்து விழுந்து சிரிக்க ஆரம்பித்துவிடுவான். "நல்ல வாசிப்பு என்றால் இந்தக் கூடையிலுள்ள பாம்புகள் தலை தூக்கி ஆடும்; இப்போது உன் வாசிப்பிலே உறங்கத்தானே செய்கின்றன?" என்று கேலி செய்தான்.

## 3

ஒரு மாதம் சென்றது. வஸ்தாரியின் மகுடி வெகு இனிமையாகச் செவி குளிர இருந்தது. அமீனுவுக்கு ஆச்சரியமும் ஆனந்தமும் தாங்கவில்லை. தன் காதலன் எந்த வித்தையிலும் ஈடு இணையற்றவன் என்று நினைத்து அவன் மனம் பூரித்தான்.

"வஸ்தாரி! நாகராஜனுக்கு முன்னால் நீ அழகாக மகுடி வாசிக்கவேண்டும்; அவன் மகுடியைக் கேட்டு மனம் மகிழவேண்டும். பயப்படாதே! விஷப் பல் எடுக்கப்பட்டது தான் அது! என் அப்பன் காலத்தில் எப்படி இனிமையான கானத்திலே லயித்திருந்ததோ, அந்த இனிமையை அது இன்னும் நினைவு வைத்துக் கொண்டிருக்கிறது. உன் சாமர்த்தியத்தில் அது எப்படி மனம் பூரிக்கிறதென்று பார்க்கவேண்டும்" என்றான் அமீனு.

"சரி" என்று சொல்லி, வஸ்தாரி நாகராஜனுக்கு முன்னால் அன்று மகுடி வாசிக்க ஆரம்பித்தான். எடுக்கும்போதே தேவாமிர்தமாயிருந்த அவனுடைய நாதத்தில் வரவர இனிமையும் குழைவும் அதிகரித்துக் கொண்டே போயிற்று. நாகப் பாம்பு தலையை நிமிர்த்திப் படத்தை அகற்றிக் கூர்ந்து கேட்டுக்கொண்டே இருந்தது.

அமீனு புளகாங்கித மடைந்தான். வஸ்தாரிக்கு தைரியமும் ஊக்கமும் பிறந்தன. தன் முழுத் திறமையையும் அவன் இசையிலே காட்டினான். அந்தக் கான வெள்ளத்திலே மயங்கிக் கல்லாக உட்கார்ந்திருந்தான் அமீனு. அவன் மனம் வெகு நாட்களுக்கு முன்னால் கேட்ட தந்தையின் மகுடியை நினைத்துப் பார்த்தது. அதோடு இந்த இசையையும் ஒப்பிட்டுப் பார்த்து அவன் உள்ளம் குளிர்ந்தான்.

இந்தச் சமயத்தில் சற்றுத் தூரத்திலிருந்த மருதமரத்துப் புதரிலிருந்து ஒரு பெரிய நாகம் புறப்பட்டுச் 'சரசர' வென்று வேகமாக அவர்களை நோக்கி வந்தது. வஸ்தாரியின் முன்னால் நின்று அது தலையைத் தூக்கியது. பிறகு படத்தை அகலமாக விரித்து இசை வெள்ளத்தைப் பருகிய வண்ணம் அசைவற்று நின்றது. பின்னர் அந்த லயத்திலே மயங்கித் தலை சுற்றி ஆனந்தமாக ஆடியது.

அமீனுவுக்கு ஒரே ஆனந்தம். அவன் வஸ்தாரியின் கண்களைப் பார்த்தான். அவை மூடிக்கொண்டுதா னிருந்தன. வஸ்தாரி கண்களைத் திறந்துவிடக் கூடாதே, இந்த நாகராஜனைப் பார்த்துப் பயந்துவிடக் கூடாதே!" என்று நினைத்தான் அவன்.

படிப்படியாக உயர்ந்து கொண்டே போன இசை யமுதத்தைப் பருகி ஆடிக் கொண்டிருந்தது அந்த நாகம். உச்சஸ்தாயியில் வாசித்துவிட்டுப் படிப்படியாக இறங்கி வந்து அலங்காரமாக நிறுத்தினால் அந்த நாகமும் திருப்தியடைந்து திரும்பிச்சென்று விடும். அப்படி எத்தனையோ தடவை அமீனுவின் தகப்பன் காலத்தில் நடந்திருக்கிறது. அப்படியே இப்போதும் நடக்க வேண்டும் என்று அமீனு நினைத்தான்.

ஆனால் அடுத்த நிமிஷம் நாதப் பெருக்கிலே ஒரு சிறு தவறைக் கண்டுவிட்டான் அமீனு. அவ்வளவுதான்; "ஐயோ! நிறுத்திவிடாதே!" என்று அவன் கத்திவிட்டான். 'எங்கே அபஸ்வரம் தட்டிவிடப் போகிறதோ!' என்ற பயப் பிராந்தியில் தான் அவன் அவ்வாறு கத்திவிட்டான்.

'சட்' என்று நிறுத்திக் கண்களைத் திறந்து பார்த்தான் வஸ்தாரி. எதிரே பிரம்மாண்டமாக நிற்கும் நாகத்தைக் கண்டதும் அவன் திடுக்கிட்டான்.

சப்த சாகரங்களுக்கும் அப்பாலுள்ள நாகலோகத்து இன்ப இசையிலே திளைத்து மனம் பூரித்துக் கொண்டிருந்தது போலிருந்த அந்த நாகம் மகுடி நின்றதும் வெகுண்டது. அத்துடன் அது நிற்கவில்லை; ஆங்காரத்துடன் 'சீத்' என்று வஸ்தாரியின்மீது பாய்ந்தது.

நல்ல வேளை! அமீனு சட்டென்று பாய்ந்து வஸ்தாரியை இழுத்து அப்புறம் தள்ளினான். அந்தக் கருநாகம் அதற்குமேல் அங்கு நிற்கவில்லை. சரசர வென்று ஓடி மறைந்துவிட்டது.

"இப்பவாவது தெரிஞ்சுக்க, பாம்பாட்டி ஜாதியும் உங்க ஜாதிக்குத் தாழ்ந்த இல்லேன்னு!" என்றான் அமீனு.

வஸ்தாரி ஒன்றும் பதில் சொல்லவில்லை. ஆனால் அவனுடைய கண்கள் அமீனுவை நன்றியுடன் பார்த்துக் கலங்கின.

மிகவும்
ருசிகரமானது
மாத்திரமல்ல-
இது
நல்லது !




முக்கியமாக
குழந்தைகளுக்கு



போர்ன்-விடாவிலுள்ள கால்ஷியமும் விடமின்களும், வளரும் குழந்தைகளுக்கு வலுவான எலும்புகளும், கெட்டியான சதையும் வளர உதவுகின்றன. பெரியவர்களுக்கு நிம்மதியான ஆழ்ந்த உறக்கமளித்து ஜீவசக்தி ததும்பச் செய்கின்றன.

# காட்பரீஸ்

# போர்ன்-வீடா

கால்ஷியம், விடமின்கள் நிறைந்தது.

காட்பரி என்பது சிறந்த ரகத்துக்கு அறிகுறி

# சாமர்த்தியத் திருடன்



விஜயம்

முருகன் மிகவும் ஜாக்கிரதையாகப் பதுங்கித்தான் போனான். பயந்து நடுங்கிக்கொண்டே வீட்டுக்குப் போக வேண்டுமானால் அவன் மூன்று மைல் தூரம் நடந்து போவதற்குள் வெகு நேரம் ஆகிவிடும். நேரம் ஆகிவிட்டால் அன்றைக்கு எஜமானைப் பார்க்க முடியாது. எஜமானைப் பார்த்துத் தான் கஷ்டப்பட்டுக் கொண்டு வந்த பொருளைக் கொடுத்தால்தான் காசு கிடைக்கும். ஆகையினால் பஸ்ஸில் ஏறி ஒன்றரையணாவைக் கொடுத்துப் பெருமாள் பேட்டை போய்ச் சேருவது என்று தீர்மானித்தான். நல்ல வேளையாகப் பஸ்ஸும் வந்தது; இடமும் கிடைத்தது.

அப்பொழுதுதான் முருகன் திடுக்கிடும்படியான ஒரு சம்பவம் நிகழ்ந்தது. அதாவது ஒரு போலீஸ்காரன் அதே பஸ்ஸில் ஏறினான். முருகன் உடனே கையில் இருந்த வஸ்துவைக் கொஞ்சம் ஜாக்கிரதையாக வைத்துக் கொண்டான். ஆனால் அவன் கையில் அகப்பட்டு விழித்துக் கொண்டிருக்க அந்தப் பொல்லாத நாய்க்குட்டிக்கு அவனுடைய சங்கடம் தெரிகிறதா? சமயம் பார்த்து 'வள், வள்' என்று இரண்டு தரம் தன் குரலைக் காட்டியது. உடனே முருகனுடைய முகத்தில் பயம் தோன்றியது. அவன் பேந்தப் பேந்த விழிப்பதையும் அவன் மடியில் ஒரு சின்ன நாய்க்குட்டி இருப்பதையும் கவனித்த கான்ஸ்டபிள் 'டக்'கென்று முருகனின் கையைப் பிடித்துக் கொண்டான்.

முருகனுக்கு ஒன்றுமே தோன்றவில்லை. என்ன சொல்லுவது என்றும் அவனுக்கு விளங்கவில்லை. ஆனால் கான்ஸ்டபிள் அவனை அப்படியே தவித்துக் கொண்டிருக்கும்படி விட்டு விடவில்லை. "ஹோல்டான்!" என்று கத்தி, பஸ்ஸை நிறுத்தினான். முருகனையும் பிடித்துத் தள்ளிக் கீழே இறக்கித் தானும் இறங்கினான்.

"டேய், இந்த நாய்க்குட்டியை எங்கே திருடினாய்? உண்மையைச் சொல்!" என்று கான்ஸ்டபிள் கடுமையான குரலில் கேட்டான்.

முருகனுக்குப் பேச நா எழவில்லை.

"ஐயா, உண்மையைச் சொல்லி விடுகிறேன். என்னுடைய எஜமான் வீட்டுப் பிள்ளை தினம் நாய்க்குட்டி வேணுமென்று அழுதான். 'எங்கேயிருந்தாவது ஒரு நல்ல நாய்க்குட்டி வாங்கிக் கொண்டு வா!' என்று சொல்லிப் பணம் கொடுத்தாரு, எஜமான்!"

"ஓகோ! எஜமான் நாய்க்குட்டி வேணும் என்று கேட்டால் திருடிக் கொண்டு போய்த்தான் கொடுக்க வேண்டுமோ?—சரி, போலீஸ் ஸ்டேஷனுக்கு நட!" என்று மிரட்டிக் கொண்டே கான்ஸ்டபிள் முருகனைப் பிடித்துத் தள்ளினான்.

"ஐயா, தயவுசெய்து மன்னிக்கணும். இந்தாங்க, நாய்க்குட்டியைக் கொடுத்து விடுகிறேன். இனிமேல் இந்த மாதிரி வேலை செய்யவே மாட்டேனுங்க! என்னை விட்டு விடுங்க. உங்களுக்குப் புண்ணியம் உண்டு!" என்று கூறி முருகன் 'ஹோ' வென்று கதறி விட்டான்.

கான்ஸ்டபிள் மனம் மிகவும் இரங்கி விட்டது. "எனக்கு என்னத்துக்கு

நாய்க் குட்டி? இந்த நாய்க்குட்டியை அதன் சொந்தக்காரரிடமே கொடுத்து விட்டு நீ ஒழுங்காக வீட்டுக்குப் போ!" என்றான்.

"ஐயா, இந்த நாய்க் குட்டியின் சொந்தக்காரரிடம் இதே மாதிரி இன்னும் ஐந்தாறு நாய்க் குட்டிகள் இருக்கின்றன. ஆகையினால் அவர் இதை வேண்டாம் என்று சொல்லிவிட்டாருங்க!" என்றான் முருகன்.

"அப்படியானால் நீயே அந்த நாய்க் குட்டியை வைத்துக்கொள். ஆனால் இந்த மாதிரி இன்னொரு தடவை திருட்டுத் தொழில் செய்து அகப்பட்டுக்கொண்டால் நான் உன்னை விடவே மாட்டேன்" என்று கூறிப் போலீஸ்காரன் முருகனை விட்டுவிட்டான்.

முருகனும் 'தப்பினோம், பிழைத்தோம்' என்று நாய்க்குட்டியுடன் வீட்டுக்குப் போய்ச் சேர்ந்தான்.

கான்ஸ்டபிள் அன்று வேலை முடிந்து வீட்டுக்குப் போனான். அவன் பிள்ளை அப்பொழுது தேம்பித் தேம்பி அழுது கொண்டிருந்தான்.

"கண்ணா, ஏன் அழுகிறாய்? உன்னை யார் என்ன செய்தார்கள்? சொல்லு, அவனைத் தாணாவுக்கு அனுப்பி விடுகிறேன்!" என்று கூறிக்கொண்டே கான்ஸ்டபிள் பையனை எடுத்து வைத்துக் கொண்டான்.

உடனே கண்ணன் அழுகையைக் கொஞ்சம் நிறுத்திக் கொண்டு, "அப்பா, நீ எனக்கு வாங்கிக் கொடுத்த நாய்க்குட்டியை யாரோ திருடிக் கொண்டு போய்விட்டான், எனக்கு அது வேணும், அப்பா!" என்று சொல்லிவிட்டு அழுதான்.

கான்ஸ்டபிள் வாயிலிருந்து வார்த்தையே வரவில்லை. தெருவில் நிற்கும் கான்ஸ்டபிள் மாதிரி அசையாமல் விறைப்பாக நின்றான்.

# காலக்ஷேபம்

### முன் யோசனை!

**பிச்சைக்காரன்:**—ஐயா, நீங்கள் சிரஞ்சீவியாயிருக்க வேண்டும். ஒவ்வொரு வெள்ளிக் கிழமையும் எனக்கு அரை ரூபாய் கொடுத்து வருகிறீர்கள். அடுத்த வெள்ளிக்கிழமை கொடுக்கப் போவதையும் இப்போதே கொடுக்கிறீர்களா?

**தனவான்:**—எதற்காக அடுத்த வாரம் கொடுக்கப் போவதையும் இப்போதே கேட்கிறாய்?

**பிச்சைக்காரன்:**—அடுத்த வாரம் நான் ஊரில் இருக்க மாட்டேன்.

★

### இரண்டில் ஒன்று

**பையன்:**—அப்பா, நான் அடுத்த வீட்டுப் பையனோடு போய் விளையாடிக் கொண்டிருக்கட்டுமா?

**தந்தை:**—கூடாது. அவன் துஷ்டப் பயல். அவனை எனக்குப் பிடிக்கவில்லை.

**பையன்:**—அப்படியானால் போய் அவனோடு சண்டை போடுகிறேனே!

★

### சிரம பரிகாரம்

**மனைவி:**—அடுத்த வீட்டு லக்ஷ்மிக்கும் எனக்கும் மனஸ்தாபம். இப்பொழுது எங்களுக்குள் பேச்சுவார்த்தையே கிடையாது.

**கணவன்:**—நல்ல காரியம் செய்தீர்கள். இரண்டு பேரும் கொஞ்சகாலத்துக்குச் சிரம பரிகாரம் செய்துகொள்ளுங்கள்!

### சுலபம்தான்!

**சித்திரக்காரர்:**—இந்த ஏரியில் அலை வீசும் அழகையும் அதில் பிரதிபலிக்கும் மலையையும் அப்படியே தத்ரூபமாகத் தீட்டுவதற்கு இரண்டு மாத காலம் பிடித்தது!

**நண்பர்:**—ஏன் அவ்வளவு சிரமம் எடுத்துக் கொண்டீர்கள்? பேசாமல் ஒரு போட்டோ எடுத்திருக்கலாமே!

★

### அவர் கவலை!

**நீதிபதி** (குற்றவாளியைப் பார்த்து):—உன் சிநேகிதனைத் தூக்கி மாடிக் கைப்பிடிச் சுவர் வழியாக வெளியே எறிந்ததாக உன் மீது குற்றம் சாட்டப் பட்டிருக்கிறது.

**குற்றவாளி:**—கோபத்திலே ஒன்றும் தெரியாமல் அப்படிச் செய்து விட்டேனுங்க!

**நீதிபதி:**—கோபமா? உன் நண்பனை நீ தள்ளிய சமயம் யாராவது தெருவில் போய்க் கொண்டிருந்தால் அவர்கள் கதி என்ன ஆகியிருக்கும்?

★

### சரியான கேள்வி

**பையன்:**—உங்களிடமிருந்து பாக்கிப் பணம் வாங்கிக் கொண்டுதான் கடைக்கு வரவேண்டும் என்று எஜமான் சொல்லியிருக்கிறார்.

**அவர்:**—அப்படியா? கடையில் எத்தனை மாதம் லீவு எடுத்துக் கொண்டிருக்கிறாய்?

# வளரும் தமிழ்

## தமிழ்ப்பண்ணை வெளியீடுகள்

கொஞ்ச காலத்துக்கு முன்பு பம்பாயில் உள்ள பிரசித்தி பெற்ற தாக்கர்ஸ் புத்தகக் கம்பெனிக்காரர்கள் குழந்தைகளுக்காக எழுதப்பட்ட ஜவாஹர்லால்ஜியின் 'சரித்திரம்' ஒன்றை வெளியிட்டிருந்தார்கள். கொட்டை எழுத்தில், ஆங்காங்கே பல வர்ணப் படங்களுடன் ரசமாக எழுதப்பட்டிருந்த மேற்படி புத்தகத்தின் ஒவ்வொரு பக்கத்தைப் புரட்டும்போதெல்லாம், "அடாடா, தமிழ் நாட்டுக் குழந்தைகளுக்கு எப்போது நல்ல காலம் பிறக்கப் போகிறதோ? எப்போது அவர்களுக்கு இத்தகைய புத்தகங்களைத் தமிழில் எழுதிக் கொடுக்கக் கூடிய புண்ணியவான்கள் தோன்றப் போகிறார்களோ?" என்ற ஆவல்பே தோன்றும்.

தேசபக்தர் திருகூட சுந்தரம் பிள்ளை மேற்படி புத்தகத்தை அவசியம் படித்துத்தானிருக்க வேண்டும். படித்ததும், அவருக்கும் மற்றவர்களைப் போல மேற்படி ஆசைதான் தோன்றியிருக்க வேண்டும். ஆனால், அவர் வெறும் ஆசையுடன் மாத்திரம் நிற்கவில்லை. சிறந்த எழுத்தாளரான அவர் மற்றவர்களுக்காகக் காத்துக் கொண்டிராமல் தாமே இந்த அருமையான தொண்டைச் செய்து முடித்திருக்கிறார். ஸ்ரீ திருகூட சுந்தரம் பிள்ளை எழுதிய குழந்தை ஜவாஹர் தமிழ் நாட்டுக் குழந்தைகளுக்கு ஒரு அருமையான பரிசு. விலை: மலிவுப் பதிப்பு 1 ரூ; உயர்ந்த பதிப்பு 1—4—0.

தமிழ்ப் பண்ணையாளர்கள் நம்முடைய கவர்னர் ஜெனரல் ராஜாஜியின் வாழ்க்கையைக் கார்ட்டூன் என்று சொல்லப்படும் கூடார்த்தப் படங்களிலே வெளியிட்டிருப்பது தமிழ்நாட்டுப் புத்தக உலகத்துக்கு ஒரு புதுமையாகும். இதில் மொத்தம் 49 கார்ட்டூன்கள் இருக்கின்றன. ராஜாஜியின் பிறப்பிலிருந்து அவர் கவர்னர் ஜெனரலானது வரை நிகழ்ந்த ஒவ்வொரு முக்கிய சம்பவமும் ஒரு கார்ட்டூனால் விளக்கப்பட்டிருக்கிறது. முற்றிலும் கார்ட்டூன் போட்டு ஒரு புத்தகத்தை வெளியிடத் துணிந்த தமிழ்ப்பண்ணையாளர்களின் துணிச்சலைப் பாராட்டுகிறோம். விலை அணா 12.

## போதும் முதலாளித்துவம்!

இரண்டு மூன்று வருஷங்களுக்கு முன்பு இந்தியாவில் உணவுப் பஞ்சம் கடுமையாக இருந்தபோது, அமெரிக்காவில் லட்சக்கணக்கான டன் கோதுமையை அந்த நாட்டு முதலாளிகள் சுட்டுப் பொசுக்கினார்களாம்; பிரிட்டனில் கோடிக்கணக்கான ஆரஞ்சுப் பழங்களைக் கடலிலே தள்ளினார்களாம்; தென்னமெரிக்காவிலே லட்சக்கணக்கான டன் காப்பிக் கொட்டையை ரயில்வே என்ஜினில் கரிக்கு பதிலாக உபயோகப்படுத்தினார்களாம்!

பைத்தியக்காரத்தனமான இந்தச் செய்கைகளுக்குக் காரணமென்ன? சரக்கு விற்காவிட்டாலும் அவற்றின் விலை குறைந்து விடக் கூடாது என்னும் முதலாளிகளுடைய பேராசையே காரணமாகும்.

முதலாளிகளுடைய பைத்தியக்காரத்தனமான பேராசைகளால் இன்று சமூகம் எப்படி இருக்கிறது? முதலாளித்துவத்தால் உலகத்துக்கு ஏற்பட்டுவரும் தீமைகள் என்னென்ன? முதலாளித்வம் இருக்க வேண்டியதுதானா, அல்லது அதை ஒழிக்க வேண்டுமா? இத்யாதி விஷயங்களைப் பற்றி ஸ்டார் பிரசுரத்தார் வெளியிட்டிருக்கும் 'போதும் முதலாளித்துவம்' என்ற புத்தகம் வெகு தெளிவாக விளக்குகிறது. விலை அணா 14: ஸ்டார் பிரசுரம், 71, பெரிய தெரு, திருவல்லிக்கேணி, சென்னை 5.

## ஞானியார் சுவாமிகள் வாழ்க்கை வரலாறு

காலஞ்சென்ற திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீ ஞானியார் சுவாமிகளைப்பற்றி நினைக்கும்போதெல்லாம், சைவ சமயக் குரவர்கள் என்று போற்றப்படும் அப்பர், சுந்தரர், சம்பந்தர் முதலிய பரமாசாரியர்களுடைய ஞாபகம் வராமலிருக்க முடியாது. அப்பரும் சுந்தரரும், சம்பந்தரும் மாணிக்கவாசகரும் சைவ சமயத்தையும் செந்தமிழையும் வளர்ப்பதையே தங்கள் வாழ்க்கை லட்சியமாகக் கொண்டு அதற்காகவே உழைத்தார்கள். அவர்களைப் போலவே ஸ்ரீ ஞானியார் சுவாமிகளும் சைவத்தையும் தமிழையும் இரு கண்ணெனப் போற்றி அரை நூற்றாண்டுக்கு மேலாகச் செந்தமிழுக்கும் சைவ சித்தாந்தத்துக்கும் அருந்தொண்டாற்றி வந்தார். தம்முடைய சீலத்தின் மூலமும் ஒழுக்கத்தின் மூலமும் மற்ற மடாதிபதிகளுக்கு ஒரு உதாரணமாக விளங்கி வந்தார்.

இத்தகைய ஒரு சமயக் குரவருடைய வாழ்க்கையை அவருடைய மாணவருள் ஒருவராகிய ஸ்ரீ வடிவேல் முதலியார் அழகாகவும் ரசமாகவும் எழுதியிருக்கிறார். தமிழ் மக்கள் அவசியம் படிக்க வேண்டிய நூல். விலை ரூ. 1—4—0.

## 'டிரில்' வகுப்பிலே!




"எங்கே, எத்தனை பேர் 'டிரில்' வகுப்புக்கு வந்திருக்கிறீர்கள்?—எண்ணுங்கள், பார்க்கலாம்?"
"ஒன்று, இரண்டு, மூன்று, நாலு, ஐந்து......!"

# தாம்பத்யம்

வை. சுப்பிரமணியன்



நடுப் பகல். கோடை வெய்யிலின் உஷ்ணம் அதிகமாயிருந்தது. கனலை விசிறுவது போலக் காற்று வேறு அந்தச் சமயம் வீசியடித்தது.

கண்ணை மூடிக்கொண்டு நாற்காலியில் சாய்ந்திருந்தேன். மனம் துருவித் துழாவிக் கொண்டிருந்தது. சிந்தனைக்குப் பிடிப்பான விஷயம் எதுவுமே யில்லை.

இந்தச் சமயத்தில் சொல்லி வைத்தாற் போல ஒரு சிட்டுக் குருவி வந்து ஜன்னலின் இரண்டு கம்பிகளுக்கு மிடையே உட்கார்ந்தது. மனம் சிட்டுக் குருவியின்மேல் சென்றது.

கடிகாரத்தில் மணி பன்னிரண்டு அடித்ததும் 'டாண்' என்று வந்துவிடும் ஒரு குருவி; அதை யடுத்து ஐந்து நிமிஷங்களுக்கெல்லாம் இன்னொரு குருவி அந்த இடத்திற்கே வந்து சேரும். இரண்டு குருவிகளும் காதலன்—காதலி போலும்!

அந்த வழக்கத்தை யொட்டி அடுத்தாற்போல் இன்னொரு குருவியும் அன்று வந்தது; இரண்டும் சேர்ந்து போட்ட கூச்சல்!—அப்பா! அவை என்ன பேசிக் கொண்டனவோ? ஒன்றை மற்றொன்று சந்தித்து விட்டதில் ஏற்பட்ட மகிழ்ச்சியின் அடையாளமோ? தன்னைப் பிரிந்து சென்றுவிட்ட தன் காதலனைப் பிடித்து ஏசின காதலியின் கூக்குரலோ? அல்லது தனிமையில் உட்கார்ந்து சிந்திக்கக்கூட விஷயமற்றுக் குருவிகளைப் பார்த்துக் கொண்டிருந்த என்னைப் பார்த்துப் பரிகசித்தனவோ?

என் தனிமையைக் கண்டு அவை பரிகசித்தால் கூட அதில் உண்மை அடங்கியிருக்கிறது என்று சொல்லவேண்டும். அவள்—ஸ்ரீமதி — ஊருக்குப் போயிருக்கிறாள். பிறந்தகத்திற்குப் போவதற்கான மகத்தான காரணம் என்னவாயிருக்கும், சொல்லுங்களேன்! நானும் ஸ்ரீமதியும் அனுபவித்த இன்ப வாழ்வின் நிரந்தரச் சின்னமாக, எங்களுக்கிடையே எங்கள் சந்ததியாக ஒரு குழந்தையுடன் திரும்பிவரப் போயிருக்கிறாள் அவள். எனவே, எனக்குத் தனிமை தான் லபித்தது.

சமூகத்தில் இன்னும் மனிதர்கள் இருந்தனர்; உலகம் இயங்கிக் கொண்டிருந்தது: டிராம், பஸ், சினிமா, கடை, இன்னும் முக்கியமாகக் காரியாலயம், இவையெல்லாம் இருக்கவே இருக்கின்றன. எனினும், ஸ்ரீமதியின் அபாரமான சக்தியால்போலும், நான் மேற்சொன்ன ஒவ்வொன்றிலும் தனிமையைத்தான் அனுபவித்தேன்.

## 2

ஒரு தினம்; வழக்கம்போல உச்சிப் பொழுதிற்கு எங்கிருந்தோ அந்த ஆண் குருவி வந்தது. ஜன்னல் கம்பிகளிடையே உட்கார்ந்து கொண்டு 'கிச், கிச்' என்று கத்திக் கொண்டிருந்தது. தான் இங்கே வந்து உட்கார்ந்து கொண்டிருப்பதை யறிவித்துத் தன் காதலியையும் சீக்கிரம் வரச் சொல்லிப் பாடிக் கொண்டிருந்த வரவேற்புக் கீதம்தான் அது!

பத்து நிமிஷ நேரம் கழிந்தது; பெண் குருவியைக் காணவில்லை. இப்படியும் அப்படியுமாகத் திரும்பித் திரும்பி உட்கார்ந்து ஆண்குருவி படபட வென்று சிறகை யடித்துக் கொண்டது. அதன் வாய் மட்டும் ஓயவேயில்லை.

இதை யடுத்து 'விர்'ரென்ற ஒரு சத்தம். ஆண் குருவி திடீரென்று அறையின் உட்புறம் நாலா திசையிலும் பறந்தது. வெப்பத்தைத் தாங்காமல் மாற்றிடம் தேடியது என்று நினைத்துக் கொண்டேன். எங்கோ கூரையின் பக்கமாக ஓர் இடத்தைப் பார்த்து அதில் உட்கார்ந்தது. அடுத்த நிமிஷம் பழைய இடத்திற்கே பறந்து சென்றது.

என்ன அதிசயம்! வழக்கமாகச் சந்திக்கும் இடத்தில் தன்னைக் காணவில்லையென்று தன் காதலி திரும்பிப் போய்விடுவாளோ என்ற பயம் போலும்!

அரை மணி நேரம் சென்றது; அப்பொழுதும் பெண்குருவி வரவேயில்லை. மெதுவாக நான்கு திசைகளிலும் பார்த்துக்

கொண்டிருந்த ஆண் குருவியின் நிலைமை பரிதாபகரமாக இருந்தது. தாம்பத்ய முறையை அனுசரித்த அதன் சுபாவத்தை எண்ணி வியந்தேன். கடைசியில் அது திடீரெனப் பறந்தே போய்விட்டது.

தனிமையில் இருந்த என்னைக் குருவியும் பிரிந்து சென்றுவிடவே, என்னுடைய ஞாபகம் எதிலும் செல்லவில்லை; ஞாயிற்றுக்கிழமை யாதலால் காரியாலயமும் இல்லை. எதிரே ஜன்னலுக்கு அப்பால் தெரிந்த வெட்ட வெளியைப் பார்த்துக் கொண்டே நாற்காலியில் சாய்ந்திருந்தேன்.

குருவிகளின் தாம்பத்ய மனோபாவம் என் சிந்தனையில் மெதுவாக உருவெடுத்தது. வாழ்க்கையைப் பறைசாற்றிக் கொண்டு வாழ முடிகிற மனிதர்களுக்குள்ளும் தாம்பத்யம் இன்றியமையாத விஷயமாயிருக்கிறது; மௌனமாகவே பூமியில் பாவாது, வானவெளியை நிலைக்களனாகக் கொண்டு பறந்து திரியும் சிட்டுக் குருவிகளின் வாழ்க்கையிலும் தாம்பத்யம் ஒரு முக்கிய அம்சமாய்த்தான் இருக்கிறது!

இது எவ்வளவு அதிசயமான விஷயம்!

3

அடுத்த ஞாயிற்றுக்கிழமை; என் வழக்கமான காரியத்தை மேற்கொண்டேன். நாற்காலியை ஜன்னல் ஓரமாகப் போட்டுக் கொண்டு உட்கார்ந்தேன். பத்திரிகையில் இருந்த செய்திகளை அப்படியே ஆஸ்வதிக்க நினைக்கிறது மனம்; ஆனால் சோம்பலுணர்ச்சி வெற்றி பெறுகிறது. அதன் பயனாகக் கையிலிருந்த பத்திரிகை விரித்தபடியே தரையில் விழுகிறது.

இப்போதெல்லாம் மனதில் வரிசையாக ஞாபகம் வரவேண்டிய முக்கியமான விஷயங்களில் குருவிகளின் தாம்பத்ய வாழ்க்கையைப் பற்றிய பிரச்னையும் ஒன்றாகி விட்டது. குறிப்பிட்ட நேரம் வரும்போதே மனதிலும் மெதுவாக எப்படியோ அவற்றின் ஞாபகம் வந்து விடுகிறது. கண்கள் ஜன்னல் கம்பிகளுக்கிடையே நோக்குகின்றன. கலாசாலையில் மனோதர்ம சாஸ்திரம் படித்தவனில்லை நான்; சாதாரணமாகச் சிந்திப்பதிலே சிறிது அதிக ஆசையுள்ளவன்; அவ்வளவுதான்!

'குருவிகளைக் காணோமே!' என்று நினைக்கும்போதே பட பட வென்ற ஓசை காதுகளை ஊடுருவியது. இரண்டு குருவிகளும் சேர்ந்தாற்போல 'விர்' ரென்று பறந்து வந்து, ஜன்னல் கம்பிகளுக் இடையே அமர்ந்தன.

திடீரென்று நான் ஓர் அதிசயத்தைக் கண்டேன். வழக்கமாக வரும் குருவிகளைப் போலல்லாமல் அந்த இரண்டில் ஒன்று மட்டும் சற்று உடல் பருத்துக் காணப்பட்டது. ஒரு நிமிஷ நேர யோசனைக்குப் பின் மனதில் பளிச்சென்று ஓர் எண்ணம் தோன்றியது......குருவிகளின் தாம்பத்ய வாழ்க்கையில் இன்பத்தின் சின்னத்தை யடைந்திருக்கிறது பெண் குருவி! அந்தக் காரணத்தினால்தான், அன்றைக்குப் பிரிந்து போன ஆண் குருவியைப் பின் பற்றிக் காதலியும் உடன் வரவில்லை!

பெண் குருவி ஸ்ரீமதியின் சின்னமாக விளங்கியதைக் கண்டதும் என்னுடைய ஸ்ரீமதியின்மேல் எனக்கு அனுதாபம் உண்டாயிற்று. அவள் இப்போது எங்



கேயோ இருக்கிறான்; கண்ணுக்குத் தெரியவில்லை. கஷ்டத்தை அனுபவித்தாலும் கடிதத்தில் எழுத மாட்டான். 'பெற்றுப் பிழைத்து வரவேணும்' என்பதற்காக என் வீதத்திற்கு காணும் தெய்வத்தைத் தினந்தோறும் வேண்டிக் கொண்டிருக்கிறேன்.

### 4

ஸ்ரீமதியிடமிருந்து கடிதம் வந்திருந்தது. அவசர அவசரமாகப் பிரித்துப் படித்தேன். மனம் குரங்கு போன்றதொரு விஷயம்தானே? கெட்டதை எண்ணிக்கொண்டே இருந்து பலவீனப்படும் அபூர்வ குணம் படைத்ததுதானே அது? அது எண்ணியதற்கேற்ப — எதிர்பார்த்ததற்கிணங்க — கடிதத்தில் கவலைக்கிடமான விஷயம்தான் குறித்திருந்தது. ஸ்ரீமதிக்கு என்னைப் பார்க்கவேண்டும் போல் இருக்கிறதாம்; பிரசவத்திற்கு இன்னும் சில தினங்களே இருப்பதால் ஒரு முறை வந்து போகச் சொல்லி எழுதியிருந்தாள்.

எனக்கு இருப்புக் கொள்ளவில்லை. மனம் கிடந்து அடித்துக்கொண்டது. இதற்கிடையேயும் எனக்குச் சிட்டுக்குருவிகளைப் பற்றிய ஞாபகம் வந்தது. முழுக்க முழுக்க என்னையும் ஸ்ரீமதியையும் ஒத்திருந்த அந்த இரண்டு குருவிகளையும், எங்கள் வாழ்க்கையைப் பிரதிபலித்த அவைகளின் வாழ்க்கையையும் எப்படி என்னால் மறக்கமுடியும்!

சென்ற சில தினங்களாக அந்தக் குருவிகள் என் அறைப்பக்கம் வரவேயில்லை. ஒரு வேளை முட்டையிட்டு விட்டதோ, அந்தப் பெண் குருவி! அப்படியாயின் ஸ்ரீமதியும் சுகமாகப் பிரசவித்து வீடு வந்து சேருவாள் என நினைத்தது மனம். ஸ்ரீமதி ஊருக்குப் போனது முதல் எங்கள் வாழ்க்கையையே பிரதிபலித்துக் கொண்டு என்னுடன் ஒன்றியிருந்த அந்தக் குருவியின் சுகப் பிரசவம்தானே எனக்குச் சுப சூசகமாக விளங்கும் விஷயம்!

மணி பிற்பகல் ஒன்று. வெய்யில் கொளுத்திக் கொண்டிருந்தது. அறைக்குள் நுழைந்து சாற்காலியில் படுக்கச் சென்றேன். 'சுப்'பென்று ஏதோ துர்வாடை வீசியதை உணர்ந்து சுற்று முற்றும் பார்த்தேன், எலி செத்துப்போன நாற்றம் மூக்கைத் துளைத்தது. இத்தனைக்கும், என் வீட்டில் எலியின் நடமாட்டமே யில்லை!

மனது யோசனையில் ஆழ்ந்தது. கண்கள் ஜன்னலின் புறம் நோக்கின. ஒன்றையும் காணவில்லை. பளிச்சென்று ஒரு யோசனை தோன்றியது......

சமையற்கட்டு வழியாக வெளிப்புறம் சென்று என் அறையின் ஜன்னல் பக்கம் வந்தேன். அவ்வளவுதான்; என்னை யறியாமல் "ஆஹா!" என்று அலறிவிட்டேன்.

வயிறு பெருத்துக் கிடந்த அந்தப் பெண் குருவி ஜன்னலின் கீழே சுட்டெரிக்கும் கட்டாந்தரையில் செத்துக் கிடந்தது!

என் வயிறு பகீர் என்றது; உள்ளம் வெடித்து விடும்போல் இருந்தது. நெஞ்சில் என்னுடைய ஸ்ரீமதியின் குரலோசை கேட்டது!.........

* * *

அன்றிரவு ரயிலில் பிரயாணம் செய்து கொண்டிருந்தபோது குருவி செத்துக் கிடந்த காட்சியே கண்முன் நின்றது. அது எந்த வழியில் செத்ததோ? வயிற்றைத் தூக்கிக்கொண்டு பறக்க முடியாமல் செத்ததோ? அல்லது, முட்டையிட முடியாமல் செத்ததோ?

ஸ்ரீமதியின் பிரசவத்திற்கு இந்தச் சிட்டுக் குருவியின் பிரசவத்தை யல்லவா எதிர்பார்த்திருந்தேன்! இந்த முடிவின் சூசகம் என்ன?—நினைக்கும்போதே பயமாயிருந்தது.

ஊர் போய்ச் சேர்ந்தேன். பரபரப்புடன் ஸ்ரீமதியைப் பற்றி விசாரித்தேன். ஆஸ்பத்திரியில் தாயும் குழந்தையும் சௌக்கியமாயிருக்கின்றனர் என்று சொன்னார்கள்.

மனம் நிம்மதி யடைந்தது. ஸ்ரீமதியை ஆஸ்பத்திரியில் போய்ப் பார்த்தேன். அப்போதும் எனக்குச் செத்துப்போன பெண் குருவியின் ஞாபகம் ஒரு விநாடி வரத்தான் செய்தது. ஆனால், மறு விநாடியே அதை மறக்க முயன்றேன்.

## ஒரு திருத்தம்

செப்டம்பர் 26-ந் தேதி "கல்கி" இதழில் "வாழ்க, நடனக் கலை!" என்னும் தலைப்பில் வெளியான விஷயத்தில் "குமாரி விசாலாக்ஷி பதங்கள் பாட" என்று இருப்பதை, "குமாரி பி. அம்புஜம் பதங்கள் பாட" என்று திருத்தி வாசித்துக் கொள்ளக் கோருகிறோம்.

# எழிலோங்கும், கோமள வதனம்

## பாண்ட்ஸ் இரு க்ரீம்களால்






உங்கள் வதனத்தின் இயற்கை சௌந்தர்யத்தை எடுத்துக்காட்ட, இருவகை க்ரீம்களின் பராமரிப்பு அவசியம். முதலாவது, சேர்த்தியாகக் கலவைசெய்த, ஊடுருவி உட்செல்லும் தைலங்களடங்கிய பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம், முகத்தை சுத்தம் செய்து மழமழப்பாக்க — இரண்டாவது, மெழுக்கற்ற பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம், பகலில் அபிருபமாக இருந்து முகத்தைக் காப்பாற்ற.

பாண்ட்ஸ் கோல்ட் க்ரீமால் பிரதி இரவும் முகத்தை சுத்தம் செய்யுக. செழுமையான தைலங்களுள்ள இந்த க்ரீமை முகத்திலும் கழுத்திலும் தடவுங்கள். பின்பு துடைத்துக் கொள்கையில் எல்லா அழுக்கும் கூடவே வந்துவிடுகிறது! இந்த பராமரிப்பினால் உங்கள் முகம் விரைவில் புதுமலர் காந்தியோங்க விளங்கும்.

பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீமால் பிரதி காலையிலும் முகத்தை வெய்யில், தூசியினின்று காப்பாற்றுங்கள். அது சருமத்திலுள் மாயமாக மறைந்து முகத்தைப் பாதுகாப்பதுடன், அதற்கு என்றுமில்லா மோகனசோபையு மளிக்கும்.







# பாண்ட்ஸ்

வியாபார விவரங்களுக்கு:
எல். டி. ஸெய்மூர் & கோ. (இந்தியா) லிட்.
பம்பாய் - கல்கத்தா - டில்லி - சென்னை - கோவா - கராச்சி - கொழும்பு - ரங்கூன்.



யாவரும் விரும்பும் ஸ்டேன்ஸ் ஆரஞ்சு பீக்கோ 1, $\frac{1}{2}$, $\frac{1}{4}$ lb. பாக்கட்டுகளிலும் 5 lb. பெட்டிகளிலும் கிடைக்கும்

நல்ல தேயிலை என்பதற்கு அத்தாட்சி ஸ்டேன்ஸ் என்னும் பெயரே

**Stanes**

ருசி தரம் இரண்டையும் விரும்புபவர்களுக்கிடையே பிரியத்தைப் பெற்றிருக்கும் ஸ்டேன்ஸ் ஸ்பெஷல் பிளெண்டு 1 lb. பாக்கட்டுகளில் கிடைக்கும்.

**தி யுனைட்டெட் காபி சப்ளை கம்பெனி லிட்.**

மானேஜிங் ஏஜண்ட்ஸ் :

டி. ஸ்டேன்ஸ் அண்டு கம்பெனி லிட்., கோயமுத்தூர்

STC : 1475



# மாந்தோப்பு மரகதம்

'வேம்பு'

"ஏன் அப்பா......யாரது......சொல்றேன் கேக்காமே மாங்காயைப் பறிச்சுக்கிட்டிருக்கையே...'' என்ற அதட்டல் குரல் கேட்டது. அதட்டலின் ஒலியாக இருந்தாலும் இனிமையான குரலாகவே யிருந்தது அது. "என்ன களவாணித்தனமாக யிருக்கிறது! காயைப் பறிச்ச தோடில்லாமல் கூடையிலே போட்டுண்டு கிளம்புரீங்களே! என்ன அக்குரமம்...... கூச்சப் போட்டு அப்பாவைக் கூப்பிடட்டுமா......?'' என்று கூறிக்கொண்டே குடிசையிலிருந்து வெளியே வந்தாள் மரகதம்.

சாவகாசமாகக் கூடையில் மாங்காய்களை நிரப்பிக் கொண்டு, "அம்மா, களவாணி ஒண்ணுமில்லே. நான் இந்த மாங்காய்களை விற்று வந்து கிரயத்தைச் சாயங்காலம் கொடுத்திடுவேன், பயப்படாதே!'' என்று கூறிக்கொண்டே வெகு கம்பீரமாக நகர்ந்தான் தங்கராஜ்.

மரகதம் திகைத்து, தங்கராஜ் போன திக்கையே நோக்கி நின்று கொண்டிருந்தாள். அவளுக்குத் தெரிந்து அவளது துடுக்குத்தனத்தையே ஸ்தம்பிக்கச் செய்தது தங்கராஜ்தான். தங்கராஜை அவள் இதற்கு முன் பார்த்ததும் இல்லை. 'ஆள் ஊருக்குப் புதிசு போலிருக்கிறது' என்று எண்ணினாள். ஆனால் என்ன துணிச்சல் அவனுக்கு? மாந்தோப்புக்குள் நுழைந்த தோடன்றி மாங்காய்களைப் பறித்துப் போட்டுக் கொண்டு "விற்று வந்து கிரயத்தைத் தருகிறானாமே!'' என்று எண்ணியபோது அவளுக்கு ஆச்சரியம் ஒரு பக்கமும்—தன்னையும் ஏமாற்றி விட்டானே என்ற துக்கம் ஒரு பக்கமும் வந்தன.

'பூந்தோட்டம்' கிராமத்தில் பூந்தோட்டங்கள் இல்லாவிடினும் அடர்ந்த மாஞ்சோலைகளும், தென்னந் தோப்புகளும் கிராமத்தைச் சுற்றிச் சூழ்ந்து ஊருக்கு அழகைத் தந்தன. அடர்ந்த இலைகளும், குலுங்கக் குலுங்கக் காய்த்திருக்கும் மாங்காய்களும் அழகுக்கு அழகு கொடுத்தன. பெரிய தோப்பு பாகசாமமுதலியார் என்றால் ஊரிலேயே தெரியாதவர்கள் கிடையாது.

பாகசாம முதலியார் தமது ஆயுளில் எத்தனையோ இன்பங்களை அனுபவித்திருக்கிறார். சிங்கப்பூர் சென்று ரப்பர் தோட்டங்களிலே இரண்டு கையாலும் வாரிச் சம்பாதித்திருக்கிறார். ஆசையோடு மணந்த மங்கம்மாளுக்குத் தங்கங்களாக இழைத்துப் பூண் செய்து ஆனந்தப் பட்டிருக்கிறார். இன்பத்தோடு துன்பமும் கூடுவது சகஜம் தானே! ஆசை மனைவி மங்கம்மாள் மாண்டாள். சிங்கப்பூர் ஆஸ்திகள் யுத்தத்தில் அழிந்தன. பங்காளிகளுக்குள் ஏற்பட்ட வழக்கில் பாதிச் சொத்து கோர்ட்டுச் செலவில் அழிந்தது. இதன் பிறகுதான் அவருக்கு எல்லாவற்றின் மீதும் வெறுப்பேற்பட்டது. நிம்மதியாக எல்லா சொத்தையும் விற்று விட்டுப் பெரிய தோட்டம் என்ற பெயர் பெற்ற அந்த மாந்தோட்டையும், அதன் நடுவே ஒரு சிறு வீட்டையும் கட்டிக்கொண்டு, மனைவி விட்டுச் சென்ற

ஞாபகார்த்தமான தம் ஒரே மகள் மரகதத்தைச் செல்வமாக வளர்த்து அமைதியான வாழ்க்கையை நடத்தி வந்தார். அவருக்கு இனி என்ன? தன் மகள் மரகதத்தைக் கலியாணம் செய்துகொடுத்துவிட வேண்டும் மாப்பிள்ளையாக வருபவன் மகளைச் செல்வமாக வைத்துக் கொள்வதுடன், மாந்தோப்பையும் பராமரிக்க வேண்டும். அவ்வளவுதானே?

ஆனால் தகுதி வாய்ந்த வரன் வருமளவும் அவருக்குக் கவலையேயில்லை. தோட்டத்தில் ஒரு மரமாவது காய்க்காமலிருக்க முடியாது. ஒரு பயல் தோட்டத்துக்குள் வந்து ஒரு காயை — ஏன் ஒரு இலையைக்கூடத் தொட முடியாது! மாந்தளிர் போன்ற மரகதம் அல்லவா 'தோட்ட ராணி'யாகக் காவல் காத்து நிற்கிறாள்!

தங்கராஜுக்கு இதெல்லாம் என்ன தெரியும். கலூரிப் படிப்பை முடித்துவிட்டு கிராமத்திலேயே தங்கிவிட வந்தவன் பொழுது போக்குக்காக உலாவி வருகையில் அடர்ந்த இந்த மாந்தோப்பும், மாந்தோப்பில் தினைப்புனம் காத்து நின்ற வள்ளி போன்ற ஒரு முல்லைக் கொடியும் அவனை உள்ளுக்குள் இழுத்தன.

## 2

அன்று இரவெல்லாம் ஏன், அன்று பூராவுமே மரகதம் தங்கராஜின் நினைவையே எண்ணிக் கொண்டிருந்தாள். அவனது கவர்ச்சிகரமான தோற்றமும், மிடுக்கான பதிலும் அவள் இதயத் திரையில் அழியாப் படமாகப் பதிந்து விட்டன.

மறு நாள் காலை, மரகதம் ஆற்றுக்குக் குளிக்கச் சென்று கொண்டிருந்தாள். "அம்மா, மரகதம்! வெளியே போயாறேன். பார்த்துக்கோ" என்று கூறிவிட்டு, மாந்தோப்பை ஒரு சுற்றுச் சுற்றிவிட்டு வெளியே போய் விட்டார் பரசுராம முதலியார். சொல்லி வைத்தாற்போல் தங்கராஜ் அந்த வேளையில் கூடையுடன் நுழைந்தான். அவன் கண்கள் மாங்காயை மட்டுமின்றி மரகதத்தையும் சுற்றிச் சுற்றிப் பார்த்தன. முதல் நாளைப் போல் மாங்காய்களைப் பறித்துப் போட்டு விட்டு ஒரு அணில் கொத்தின பழத்தைச் சுவைத்துக் கொண்டிருக்கையில், குடத்துடன் வந்தாள் மரகதம். தங்கராஜைக் கண்டவுடன் திடுக்கிட்டாள். அவள் இதயம் படபடத்தது. பூந்தோட்டம் வாலிபர்களுக்கு நாகசர்ப்பமான மரகதம் தங்கராஜுக்குப் படமெடுக்காது பயந்தது வியப்புத்தான்.



"அம்மா...... நேற்று எடுத்துச் சென்ற மாங்காய்களைப் பணிரண்டணாவுக்கு விற்றேன். நான்கணா லாபம் எடுத்துக் கொண்டேன். எட்டணா முதலுக்காக...!" என்று கணீரென்று பதில் சொல்லிச் சில்லறையைக் கீழே வைத்து விட்டுப் பதிலைக் கேட்காமலேயே மாங்காயுடன் கிளம்பினான் தங்கராஜ். தோட்டத்தின் கதவு தாண்டும் வரை திரும்பிப் பார்த்துக் கொண்டே சென்ற தங்கராஜை இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தாள் மரகதம். அப்பொழுதுதான் குளித்திருந்தாள் என்றாலும் அவள் உடல் குப்பென்று வியர்த்தது. இப்படி மாங்காயைக் கண்ணுக் கெதிரே

எடுத்துச் செல்கிறவனைப் பற்றி அப்பாவிடம் சொல்லிவிட வேண்டும் என்று அவள் உள்ளம் துடித்தது. ஆனால் அப்படிச் செய்ய அவள் மனம் இடம் கொடுக்கவில்லை.

இதுபோல் நான்கு நாளைக்குமேல் நடந்து விட்டது. மரகதத்திற்கு அழுகை அழுகையாக வந்தது. தன்னைக் காவல் வைத்து விட்டுப் போன தன் தந்தை இதைக் கண்டால் என்ன நினைப்பார்? இவருக்குத்தான் என்ன துணிச்சல்! அப்பாவிடம்தான் சொல்லிப்பார்ப்போமே என்று துணிந்து விட்டாள் மரகதம். ஆனால் அவன் வந்து மாங்காயைத் திருடுவதை என் மனப்பூர்வமாக அவள் தடுக்கவில்லை? அவளுக்கே அதன் காரணம் புரியவில்லை. அவன் தன்னையறியாமலே மாங்காய்த் திருடன் வரும் நேரத்தை ஆவலுடன் எதிர்பார்க்கலானாள்.

3

வழக்கம்போல் அன்றும் பரசுராம முதலியார் தன் மகளிடம் சொல்லிக் கொண்டு கிளம்புகையில் "மரகதம்...... இன்னிக்கு மாங்காய்களைக் குத்தகைக்கு விடுகிறேன். கடைக்காரன் வருவான்; பறித்துக் கொடுத்து விடு" என்றார். மரகதத்திற்குத் திக்கென்றது.

"அப்பா! நேற்றே சொல்ல வேண்டுமென்று நினைத்தேன். மேற்கு மர வரிசையைப் பாருங்களேன்!" என்றாள்.

"ஏன்...... பார்த்தேன்."

"சரியாப் பாருங்க, அப்பா! தினமும் ஒருத்தன் வந்து ......"

"என்ன, என்ன......அடடே......மாங்காய்களெல்லாம் எங்கே?" என்று ஆச்சரியத்துடனும், ஆத்திரத்துடனும் மரங்களிடம் ஓடினார்.

"யாரது...... ஒருத்தன் வந்து...... சொல்லு சொல்லு......அட......மாங்காய்களையே காணுமே......" என்றார் படபடக்க. தன் தந்தைக்குத் திடீரென கோபம் வருமெனத் தெரியும். ஆனாலும் சொல்ல ஆரம்பித்த சமாசாரத்தை முழுவதும் கூறுவிடவில் விடமாட்டாரே. அதனால் நடந்த விஷயத்தில் பாதியை மறைத்து எவனோ ஒருவன்—புது ஆள் வந்து மாங்காய்களைத் திருடிச் செல்வதாகக் கூறி விட்டாள்.



பரசுராம முதலியாரின் மீசை துடித்தது. "இந்த வட்டாரத்திலே பரசுராமன் தோப்பிலே நுழைய ஒருத்தனுக்கு தைரியமா? நீ சொல்கிற அடையாளத்தைப் பார்த்தால் அந்தப் பட்டணத்திலிருந்து இங்கே யார் வீட்டுக்கோ வந்திருக்கானுமே ஒரு பிள்ளையாண்டான், அந்தப் பயலாகத்தானிருக்கணும். அயோக்யப் பய, விட்டேனு பார் அவனை!" என்று கர்ஜித்துக் கொண்டே, மேல் துண்டை உதறிப் போட்டுக் கொண்டு கிளம்பினார்.

'ஏண்டாப்பா சொன்னோ'மென்றாகிவிட்டது மரகதத்திற்கு. துடித்த மீசையும், படபடப்பான பேச்சும் என்ன விபரீதத்திற்கு உள்ளாக்கிவிடுமோ? 'அவர் என்ன ஆவாரோ, பகவானே!' என்று துடி துடித்தாள் மரகதம்.

பரசுராமமுதலியார் அந்தண்டை போனதும், தங்கராஜ் சொல்லி வைத்தாற்போல் வந்து நின்றான்.

மாங்காய்த் திருடன் வந்ததில் மரகதத்திற்கு 'நல்ல வேளை' என்ற திருப்தி எப்படியோ உண்டாகியது. இன்றைக்கு ஒரு பெருத்த சண்டை கிராமத்தில் ஏற்பட்டிருப்பது எப்படியாவது நீங்கிவிடும். வந்த 'அவரை' வீட்டிலேயே இருக்கச் செய்து அப்பா வந்ததும் கெஞ்சிக் கேட்டு மன்னித்துவிடச் செய்ய வேண்டும் என்று திட்டமிட்டான்.

தங்கராஜின் வாரி விட்ட கிராப்பும், புன்முறுவலும். அவளை ஒரு குலுக்குக் குலுக்கியது. அந்த அடர்ந்த மா இலைகளின் வழியாகப் பிரவேசித்த இளஞ்சூரிய வெளிச்சத்தில் மரகதம் தங்கப் பதுமையாகவே தங்கராஜின் கண்களுக்குத் தோன்றினாள்.

மரகதம் நடந்த விஷயங்களைச் சொல்லி, நேரக்கூடிய விபரீதங்களையும் கூறி அவரை உள்ளே போய் இருக்கும்படிச் செய்து தந்தையின் கோபத்திலிருந்து தப்பவைக்க வேண்டும் என்று துடித்தாள். ஆனால் அவள் நெஞ்சிலிருந்து ஒரு வார்த்தைகூட எழவில்லையே!

எவ்வளவு நேரம் இருவரும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டு நின்று கொண்டிருந்தார்களோ, தெரியாது. இரண்டு மூன்று பேர்களின் காலடிச் சத்தம் கேட்டு இருவரும் திடுக்குற்றுத் திரும்பினர். தன் தந்தையையும், இன்னும் இருவரையும் கண்டவுடன் மரகதம் ஸ்தம்பித்து விட்டாள். ஒருகணம் தலையே சுழன்றது போலாகி விட்டது. 'என்ன நேரப் போகிறதோ?' என்று பயந்தாள்.

தங்கராஜ்கூட பயந்து விட்டான். தன் மாமாவுடன் இன்னும் இருவர் இங்கு வரக் காரணம் என்ன? ஒரு பெண்ணுடன் தனியாகப் பேசிக் கொண்டிருப்பதைத் தன் மாமா கோபிக்கப் போகிறாரோ என்று எண்ணிக் கொண்டிருக்கையிலேயே தங்கராஜின் மாமா, "தங்கராஜ்! அதிர்ஷ்டசாலிடா நீ! இவருக்கு நமஸ்காரம் பண்ணு!" என்று பரசுராம முதலியாரைச் சுட்டிக் காட்டினார்.

"மரகதம்! பேஷ்... நல்ல வரனுக்காக நான் தேடித் திரியாமல் நீயே சுலபமாகப் பிடித்து விட்டாயே. மாங்காய்க் கள்ளன் உன் மனதையும் கவர்ந்ததைச் சொல்லாமல் காலையில் ஒரு கணம் கோப மூட்டி விட்டாயே! நல்லவேளை, தங்கராஜ் என் சிநேகிதர் முருகேச முதலியாரின் தங்கை மகன் அல்லவா! உம்... முருகேச முதலியாருக்கு நமஸ்காரம் பண்ணு" என்றார் பரசுராம முதலியார் சிரித்தபடியே.

திருதிருவென்று மரகதமும், தங்கராஜும் விழித்தபோதிலும், தம்மையறியாமலே முறையே பரசுராம முதலியாரையும் முருகேச முதலியாரையும் நமஸ்காரம்செய்தனர்

# கம்பர் தரும் காட்சி

டி.கே.சி.

## 227. சிந்தையாலும் தொடாச் செவ்வரம்

சீதை அநுமனிடம் சொல்கிறாள்:

''என்னைச் சரியாய்ப் பாதுகாக்க வேண்டும் என்று லக்ஷ்மணனிடம் சட்டளையிட்டிருந்தான் அல்லவா ராமன். ஆகவே என்னைக் காக்க வேண்டியவன் லக்ஷ்மணன்தானே.''

ஏத்தும் வென்றி
  இளையவற்(கு) ஈதொரு
வார்த்தை கூறுதி:
  மன்அரு ளால்எனைக்
காத்தி ருந்தவற்
  கேகடன், இன்றிடை
கோத்த வெஞ்சிறை
  வீ(டு)என்று கூறுவாய்

[ஏத்தும் வென்றி இளையவற்கு: யாருமே புகழும் வெற்றிகளுக்கு உரியவனான தம்பி லக்ஷ்மணனுக்கு; ஈதொரு வார்த்தை கூறுதி: இந்த ஒரு வார்த்தையை நீ சொல்ல வேண்டும்; மன் அருளால் என்னைக் காத்திருந்தவற்கே கடன்: ராமனது கட்டளையினால் என்னைக் காத்திருந்தவனுக்குத்தானே கடமை; இன்று இடை கோத்த வெஞ்சிறை வீடு: இப்போது இடையில் வந்த இந்தக் கொடிய சிறையிலிருந்து என்னை விடுவிப்பது கடமை — என்று சொல்லுவாயாக.]

* * *

லக்ஷ்மணன் ஞாபகம் வந்தது. அவனுக்குச் சொல்ல வேண்டிய வார்த்தையைச் சொல்லிவிட்டாள். அடுத்தாற்போல் ராமனது ஞாபகம் வருகிறது. இந்த இடத்தில் மனசுக்குள் ஒரு ஏமாற்றமும் சோர்வும் புகுந்து விடுகின்றன. ஒரு மாசத்துக்குமேல் உயிரைத் தாங்கிக்கொண்டிருக்க முடியாது என்று சொல்லுகிறாள்.

திங்கள் ஒன்றின்என்
  செய்தவம் தீர்ந்ததால்;
இங்கு வந்திலை
  னேஎனின், யாணர்நீக்

கங்கை ஆற்றங்
கரைஅடி யேற்குத்தன்
செங்கை யால்க்கடன்
செய்கென்று செப்புவாய்!

[திங்கள் ஒன்றின் என் செய்தவம் தீர்ந்த நாள்: ஒரு மாசத்தில் உயிரைக் காப்பாற்றிக் கொண்டிருக்க வேண்டிய என் நோன்பு தீர்ந்துவிடும்; இங்கு வந்திலனே எனில்: அதற்குள் இங்கு ராமன் வராமல் போனால்: யாணர் நீர்க் கங்கை ஆற்றங் கரை: புது வெள்ளம் புரண்டு வரும் கங்கை ஆற்றங் கரையில்: அடியேற்கு: எனக்கு: தன் செங்கையால்க் கடன் செய்க என்று செப்புவாய்: தன்னுடைய அழகான கைகளினாலேயே எனக்குச் செய்ய வேண்டிய அபரக் கிரியைகளைச் செய்து தீர்க்கும்படிச் சொல்லுவாயாக.]

•••

மாமியார்களைப் பற்றி ஞாபகம் வரவும் அவர்களுக்குச் சொல்ல வேண்டிய வார்த்தைகளையும் சொல்லி விடுகிறாள்.

சிறக்கும் மாமியார்
மூவர்க்கும், சீதையாண்(டு)
இறக்கின் றாள், தொழு
தாள், என்னும் இன்னசொல்
அறத்தின் நாயகன்
ஆர்அருள் இன்மையால்
மறக்கு மாயினும்,
நீமற வேல்ஐயா!

[சிறக்கும் மாமியார் மூவர்க்கும்: ராமனது அன்புக்குப் பாத்திரமான கோசலை, சுமித்திரை, கைகேயி ஆகிய மூன்று மாமியார்களுக்கும்: சீதை யாண்டு இறக்கின்றாள் தொழுதாள்: சீதையானவள் இலங்கையில் இறக்கின்ற தறுவாயில் உங்கள் மூவர்க்கும் வணக்கம் செய்தாள்; என்னும் இன்னசொல்: என்ற இந்தச் சொல்லை; அறத்தின் நாயகன்: ராமன்; ஆர் அருள் இன்மையால்; என்னிடத்தில் நிலையான கருணை இல்லாது போகும் ஆதலால்; மறக்குமாயினும்: மறந்துவிட நேர்ந்தாலும்; நீ மறவேல் ஐயா: நீ மறந்து விடாதே.]

குறிப்பு: எப்படியோ வேண்டாதபடி ராமன் வந்து மீட்க மாட்டான்; தான் எப்படியும் உயிர் துறக்க வேண்டியதுதான் என்ற எண்ணம் சீதையின் உள்ளத்தில் புகுந்து விட்டது. அந்த தன்னந்தனி நிலைமையில் ராமன் தன்னைக் கவனிக்க மாட்டான் என்றுகூட எண்ணுகிறது அவள் மனசு.

•••

"நான் சாமான்யப் பெண்தானே: எந்தப் பெண்ணுக்குங் கிடைக்காத தெய்வப் பிறவியாகிய ராமன் எங்கோ இருந்து வந்து என்னைப் பாணிக்கிரகணம் செய்தான் அல்லவா!" என்ற அதிசயம் மனசுக்கு வருகிறது.

வந்தெ னைக்கரம்
பற்றிய வைகல்வாய்
இந்த இப்பிற
விக்கிரு மாதரை
சிந்தை யாலும்
தொடேன், என்ற செவ்வரம்
தந்த வார்த்தை
திருச்செவி சாற்றுவாய்.

[வந்தெனைக் கரம் பற்றிய வைகல்வாய்: அயோத்தியிலிருந்தே வந்து என்னை மணந்த சந்தர்ப்பத்தில்; செவ்வரம்: உண்மையான வரமாக.]

ராமனுடைய தூய உள்ளம் ஏக பத்னி விரதத்தோடு ஒட்டியிருந்தது. அந்த மனப்பாங்கை அறிந்தவளான சீதை, வேறொரு பெண்ணை ராமனது சிந்தைகூடக் கருதாது என்ற உறுதியில் இருந்தாள். அதனாலேயே உடலை விட்டுவிட்டு, "சிந்தையாலும் தொடேன்" என்ற வார்த்தை வருகிறது.



## காரணம் புரிந்தது!

மிதிலை வாசியான டாக்டர் அமரநாத் ஜா ஐக்கிய மாகாணத்து 'பப்ளிக் சர்விஸ் கமிஷ'னின் தலைவராக இருந்த காலத்தில் ஒரு சமயம் கலெக்டர் வேலைக்காகச் சில நபர்களைத் தேர்ந்தெடுக்க வேண்டியிருந்தது.

அவரைப் பேட்டி காண பலியா என்னும் நகரத்திலிருந்து வாலிபன் ஒருவன் வந்திருந்தான். பலியா வாசிகளுக்கு அறிவு சற்றுக் குறைவு என்பது அந்தப் பிராந்தியத்தில் மிகவும் பிரசித்தம். டாக்டர் அமர்நாத் ஜா அந்த வாலிபனைப் பார்த்து. "பலியாவாசிகள் இவ்வளவு முட்டாள்களாக இருப்பதற்குக் காரணம் என்ன?" என்று பரிகாசமாகக் கேட்டார்.

வாலிபன் சட்டென்று "பலியாவுக்குப் பக்கத்தில் மிதிலை இருப்பது தான் அதற்குக் காரணம் போலும்" என்று பதில் அளித்தான்.

# அடுத்த வீட்டு அன்பர்

கோமதி சுவாமிநாதன்

ஒரு சமயம் எனக்கு வெகு அவசரமாக ஒரு ஐம்பது ரூபாய் தேவையாக இருந்தது. எங்கெல்லாமோ முயற்சி செய்து பார்த்தும் பலனில்லை.

"அடுத்த வீட்டுக்காரரைக் கேட்டுப் பாருங்களேன்!" என்றாள் என் மனைவி லக்ஷ்மி.

"அவர் யாரென்றுகூட எனக்குத் தெரியாதே! மேலும் அவர்கள் பணம் அதிகமாகப் புழங்குகிறவர்களாகத் தெரியவில்லையே; முதல் முதலாக அவர்களிடம் கடனுக்குப் போய் நின்றால் நன்றாயிருக்குமா?" என்றேன் நான்.

"வாயுள்ள பிள்ளைதான் இந்தக் காலத்தில் பிழைக்கும். நேராக அடுத்த வீட்டுக்காரரிடம் போய், உங்களை அறிமுகப்படுத்திக்கொண்டு கொஞ்சம் ஊர் வம்பை அளந்து விட்டு, பேச்சோடு பேச்சாகக் கடனையும் கேட்டு வாங்கிக் கொண்டு வாருங்கள். இன்று ஞாயிற்றுக்கிழமை தானே!" என்று உற்சாகப்படுத்தினாள்.

அவள் யோசனையை நான் ஒப்புக்கொண்ட போதிலும், எனக்கென்னவோ அடுத்த வீட்டுக்காரரைப் பற்றி அவ்வளவு நம்பிக்கை ஏற்படவில்லை.

இருந்தாலும் கேட்டுப் பார்த்துவிடுவது என்று எண்ணி, அன்று பகல் இரண்டு மணிக்கு மெதுவாக அடுத்த வீட்டு வாசற்படி ஏறினேன். திண்ணையில் ஒருவரும் இல்லை. வாசற் கதவு முக்காலே அரைக்கால் வாசி சாத்தப்பட்டிருந்தது. உள்ளே கூடத்திலிருந்து பேச்சுச் சத்தம் வந்துகொண்டிருந்தது. கூப்பிடலாம் என்று எண்ணி நான் தொண்டையைச் சரிப்படுத்திக் கொண்டபோது உள்ளே இருந்து வந்த பேச்சு மிகவும் தெளிவாக என் காதுகளில் விழ ஆரம்பித்தது. நான் அப்படியே ஸ்தம்பித்து நின்று விட்டேன்.

"இதோ பார், கையிலே ஜாஸ்தியில்லை. இருபத்தையாயிரம்தான் இருக்கு. இதிலே பாங்குக்குப் பன்னிரண்டாயிரம் கட்டியாக வேண்டும்" — இது அங்கிருந்த பெரியவரின் குரல்.

"பேஷாக பாங்குக்குக் கட்டி விடுங்கள். உங்களுக்குத்தான் இன்னும் எட்டாயிரம் வரவேண்டியிருக்கிறதே!" —இது சின்னவரின் பதில்.

"அப்படிக் கட்ட முடியாது. கைவசம் நிறைய வைத்துக்கொள்ள வேண்டும்."

"அப்படியானால் அந்த 'பிளாட்டை' விற்று விடுவதுதானே?"

"அவசரப் படக்கூடாது; கூட இன்னும் மூவாயிரம் கிடைக்கலாம்."

"சரி, இந்தாருங்கள் நான் கொடுக்க வேண்டிய பதினையாயிரம்!"

நான் மெய் மறந்து நின்றுவிட்டேன். ஆட்கள் பழைய கைகள் போலிருக்கிறது! சர்வ சாதாரணமாக ஆயிரக்கணக்கான ரூபாய்களில் புரளுபவர்கள் போலிருக்கிறது. அதுதான் அசடுமாதிரி இருக்கிறார்கள்! முப்பதினாயிரம் ரூபாய் மூச்சுவிடும் நேரத்திற்குள் புரளுகிறதென்றால் அவர்கள் சாமானிய மனிதர்களாக இருக்க முடியுமா? 'அவர்கள் வியாபார விஷயமாகப் பேசும்போது தொந்தரவு செய்யக் கூடாது; விஷயம் கெட்டுவிடும். அவர்கள் பேச்சு நின்றவுடன் நாம் உள்ளே போகலாம்' என்று தீர்மானித்துத் தயாராக நின்றேன்.

அதே வினாடியில், நிர்மலமான ஆகாயத்தில் கோடை இடி இடிப்பதுபோல் அந்த வீட்டுக்கார அம்மாளின் பேச்சுக் குரல் கேட்டது.

"நன்றாகத்தானிருக்கு!" என்று ஆரம்பித்தாள். 'சரி, வைர நெக்லேஸ் ஏதாவது தனக்கு உடனே வேண்டுமென்று சொல்லப் போகிறாளோ?' என்று நினைத்தேன்.

"பேஷ், சின்னக் குழந்தைகள் போல் நன்றாக இந்த 'டிரேட்' விளையாட்டு விளையாட உட்கார்ந்திர்கள்! அந்த அட்டையையும் காய்களையும் இப்படிக் கொண்டுவாருங்கள்! ஆயிரமாம்! ஐயாயிரமாம்! முதலில் எங்கேயாவது போய்ப் பத்து ரூபாய் கைமாத்து வாங்கிக்கொண்டு வாருங்கள். வீட்டிலே கடுகிலிருந்து காப்பிப்பொடி வரை வாங்கியாக வேண்டும்!" என்றாள் அழுத்தம் திருத்தமாக.

என் தலை சுற்றியது. இருந்தாலும் ஒரு வழியாய்ச் சமாளித்துக் கொண்டு வீட்டுக்கு வந்து சேர்ந்தேன். கதவையும் தாழ்ப்பாள் போட்டேன். ஒருவேளை அவர் என்னிடமே கைமாற்றுக்கு வந்து நின்றால் நான் என்ன செய்வது?

# வட்ட மேஜை

தியாகராயநகர்
2—10—48

## ரேடியோ எப்படி ?

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு.

நான் அகில இந்திய ரேடியோ ஒலிபரப்பும் செய்திகள், விமர்சனங்கள், பேச்சுக்கள், இவை ஒன்றையும் விடாமல் கேட்பவன். ஏனெனில் அலுப்பைத் தரும் விஷயங்களைக் கூட மிகவும் சுவை மிகுந்தனவாகச் செய்யும் மாண்பு நமது அகில இந்திய ரேடியோ நிலையத்துக்குத்தான் உண்டு!

ஒரு சமயம் திருச்சி நிலையத்திலிருந்து ஒரு பெரியாரின் பேச்சு ஒலிபரப்பப் போவதாக அறிவிக்கப்பட்டிருந்தது. அப்பேச்சு ஆரம்பிப்பதற்கு ஒரு நிமிஷமுன் ரேடியோவைத் திறந்து வைத்துக் கொண்டேன். குறித்த காலத்தில் ரேடியோக்காரர், "இனி பதினைந்து நிமிஷங்களுக்கு ஸ்ரீமான்............ அவர்கள் பேசுவார்" என்று அறிமுகம் செய்து வைத்தார். அதற்குப் பிறகு ஒரு நிமிஷம் நிசப்தம் நிலவியது பிறகு. 'கொர கொர' வென்றும், சீனவெடி வெடிப்பது போன்றும், மத்தாப்பு எரிவது போன்றும் இன்னும் தீபாவளி சம்பந்தமான எல்லாவித வெடிகளும், வாணங்களும் ரேடியோவில் ஒலித்தன. சரியாகப் பதினைந்து நிமிஷங்களுக்குப் பிறகு "......இதுவரை பேசியவர் ஸ்ரீமான்..........அடுத்த நிகழ்ச்சி உடனே தொடரும்..." என்ற வார்த்தைகள் ஸ்பஷ்டமாகக் காதில் ஒலித்தன. உண்மையில், உலகத்திலேயே நமது அகில இந்திய ரேடியோ மூலம் தான் மேற்கூறிய புதிய பாஷையில் முதன் முதலில் பேச்சு ஒலிபரப்பப் பட்டிருக்கிறது. இது நாம் பெருமையடைய வேண்டிய விஷயம் தானே!

சில வருஷங்களுக்கு முன் ஒரு சரித்திரப் பேராசிரியரின் ரேடியோப் பிரசங்கத்தைக் கேட்க நேர்ந்தது. பேராசிரியர் கம்பீரமான குரலில் தம் 'பேச்சை'ப் படித்துக் கொண்டே வந்தார். சில நிமிஷங்களுக்கெல்லாம் படித்ததையே திரும்பவும் படித்தார். எனக்குத் தூக்கி வாரிப் போட்டது! பிறகு விஷயம் புரிந்தது. தாம் வாசித்த காகிதங்களையும் வாசிக்காதவைகளையும் அவர் கலந்து வைத்துக்கொண்டு விட்டார், அவசரத்தில் அவ்வாறு படித்த பக்கங்களையே திரும்பவும் படிக்க நேர்ந்தது என்று ஊகித்துக் கொண்டேன். இருந்தாலும் அவர் அவ்வாறு செய்திராவிட்டால் பேச்சு அவ்வளவு சுவாரஸ்யமாக இருந்திராது!

மஹாத்மா காந்தியின் பிறந்த தினமான அக்டோபர் இரண்டாந் தேதி திருச்சி நிலையத்திலிருந்து ஒலிபரப்பப்பட்ட ஒரு அறிமுகச் செய்தி. "......இப்பொழுது மதுரை காலேஜ் பிரின்ஸிபால் ஸ்ரீமான் பி. மஹாதேவன் அவர்கள், 'மஹாத்மாஜியும் மாணவர்களும்' என்ற விஷயம் பற்றிப் பேசுவார்கள்......இதோ, மிஸ்டர் மஹாத்மா பேசுகிறார்" என்று கூறியது. சிறிது நிசப்தம். பிறகு. "......மன்னிக்கவும்; மிஸ்டர் மஹாதேவன் பேசுகிறார்" என்ற திருத்தம் வந்தது.

இவையும், இவைபோன்று அவ்வப்போது ஒலிபரப்பப்படும் விஷயங்களும், நாடக, சங்கீத நிகழ்ச்சிகளைக் காட்டிலும் சுவை மிகுந்தனவா, இல்லையா?

கு. திருவேங்கடாச்சாரி

கோவை
10—9—48

## மாணவர் குறை தீருமா ?

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு.

நம் கல்வி மந்திரியின் புதுத் திட்டப்படி சில கல்லூரிகளில் சரித்திரமும், தர்க்க சாஸ்திரமும் தமிழிலேயே கற்பிக்கப்பட்டு வருகின்றன. இது சந்தோஷப்பட வேண்டிய விஷயமே.

ஆயினும் மேற்குறித்த பாடங்கள் தமிழில் கற்பிக்கப்படுவதில் சில குறைபாடுகள் இருக்கின்றன. தர்க்க சாஸ்திர நூலுக்கு வேண்டிய புத்தகங்கள் தமிழில் ஒரு சிலவே இருக்கின்றன. இவை மாணவருக்குப் போதா. பெரும்பாலான புத்தகங்கள் ஆங்கிலத்திலேயே எழுதப் பட்டிருக்கின்றன.

தமிழில் படிக்கும் தர்க்க சாஸ்திரத்திற்கும் பல்கலைக் கழகப் பரீட்சைகளில் கேட்கப்படும் வினாக்கள் ஆங்கிலத்தில் கேட்கப்படுகின்றன. விடை தமிழில் எதிர்பார்க்கப்படுகிறது. இம்முறை மாணவர்களைப் பெரும் தொல்லைக்கு உள்ளாக்குகிறது.

ஆகவே, தமிழில் தர்க்க சாஸ்திரம் கற்கும் மாணவர்களின் சௌகரியத்தை உத்தேசித்து வினாத் தாள் தமிழிலேயே கொடுக்கப்பட்டால் நலமாயிருக்கும்.

எம். எஸ். ஈஸ்வரன்

பெரம்பூர்
20—9—48

## தபால் விலாசம்

"கல்கி" ஆசிரியரவர்களுக்கு.

வெளியூர்களிலிருக்கும் தங்களுடைய பந்துக்களுக்குத் தபால் எழுதினால் கவர்மேலோ அல்லது கார்டிலோ விலாசம் சரியானபடி எழுதவேண்டும். அப்படி யில்லாமல் நம் தபால்காரத்தானே என்று எண்ணிப் பெயரும் பேண்டாரிகள் மாத்திரம் எழுதித் தபாலில் போட்டு விட்டால் போய்ச்சேருவதில்லை. சில 'கோவிந்தராஜன், பெரம்பூர்' என்று விலாசம் எழுதினால் எப்படித் தபால்காரர்கள் பட்டுவாடா செய்வார்கள்? தவிர, பொது மக்கள் தம் பந்துக்களுக்கு ரூபாய் செலவு செய்து தந்தி கொடுக்கிறார்கள். எப்படி கொடுக்கிறார்கள் என்றால் விலாசத்திலேயே குறைத்து விடுகிறார்கள். ஒரு வார்த்தைக்கு ஒரு அணா போய்விடுகிறதே என்று சிக்கன முறையைக் கையாளுகிறார்கள். தபால்காரர்களால் அந்த விலாசத்தைக் கண்டு பிடிக்க முடிவதில்லை. தவறான விலாசமிட்டு வரும் தந்தியைக் கூடு மானவரையில் சிந்தனை செய்து பட்டுவாடா செய்யத் தான் முயற்சிக்கிறார்கள். பொது ஜனங்கள் நன்றாகக் கல்வி வந்த இந்தக் காலத்தில், தபால் கார்டிலோ கவரின்



"இந்தத் தெருவின் சுற்று வட்டாரத்திலேயே திருட்டு பயம் இருக்காதுன்னு நினைக்கிறேன்டா......!"

மேலோ தந்தியிலோ, சரியான விலாசம் எழுதாததைப் பற்றி வருந்துகிறோம்.

ஏ. நடராஜன்.
(தந்திச் சேவகன்)

வெங்கலக்குறிச்சி
20—9—48

## கல்வி இலாகாவின் நிர்வாகம்

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு.

வெங்கலக்குறிச்சி கிராமத்தில் ஒரு ஜில்லா போர்டு ஆரம்பப் பாடசாலை இருக்கிறது. கடந்த சில மாதங்களாக அந்தப் பள்ளிக்கூடம் நடைபெறுவதில்லை. விசாரித்ததில் உபாத்தியாயருக்கு ஆர்டர்கள் அனுப்புவதாகவும், ஆனால், எந்த உபாத்தியாயரும் வேலையை ஒப்புக்கொள்ள முன் வருவதில்லை என்றும் தெரியவருகிறது. கிராமத்தின் குழந்தைகள் பள்ளிக்கூடம் இல்லாமல் கஷ்டப்படுகின்றனர். கட்டாயக் கல்வியை அமுலுக்குக் கொண்டு வரும் அரசாங்கத்தார் கிராமக் கல்வி முன்னேறுவதற்கான ஏற்பாடு செய்வார்களா?

பு. கு. குமாரசாமி.

திருவண்ணாமலை
23—9—48

## இது என்ன நியாயம்?

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு.

எங்கள் வட ஆற்காடு ஜில்லா போர்டு ஆரம்பப்பள்ளி ஆசிரியர்கள் தேக அசௌக்கியத்தினால் மெடிகல் லீவுக்கு மனுப்போட்டு சமீபத்திலிருக்கும் அல்லது ஏற்கனவே அவர்களுக்குப் பரிச்சயமும் அனுபவமுமான ஒரு ரிஜிஸ்டர்டு டாக்டரிடமிருந்து சர்டிபிகேட் வாங்கி அனுப்பினால், உடனே மறு தபாலில் ரிஜிஸ்டர்டு போஸ்ட் மூலம், மூன்று தினத்திற்குள் ஜில்லா மெடிகல் ஆபீஸர் முன் ஆஜராகும்படியும், தவறினால் ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்படும் என்றும் தாக்கீது வருகிறது. ஜில்லா மெடிகல் ஆபீஸர் இருக்கும் இடத்திற்கும் உபாத்தியாயர் வேலை பார்க்கும் கிராமத்திற்கும் இடையில் சாதாரணமாய் 80 அல்லது 100 மைல் தூரம் இருக்கிறது. இந்த தூரத்தைக் கொஞ்சம் கால் நடையாகவும், கொஞ்சம் வண்டியிலும் கொஞ்சம் பஸ்ஸிலும், மீதியை ரயில் மூலமாகவும் கடக்க வேண்டியிருக்கிறது. இதனால் அதிகப் பணச் செலவும் தேக அசௌக்கியமும் ஏற்படுகிறது.

ஆ. சுப்பிரமணியம்.

பங்களூர்
28—9—48

## குரங்கு ஏற்றுமதி

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு.

முன் ஒரு சமயம் திருவாங்கூரிலிருந்து 'தோரியம்' என்ற உலோகத்தை அதிகப் பணம் கிடைக்கின்றது என்று கூறிக் கொண்டு மேல்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்து கொண்டிருந்தனர். அப்பொழுது அதை உபயோகமற்ற பொருள் என்றே கருதி வந்தனர். பின்னர் அதுதான் 'அணுகுண்டு' செய்வதற்கு அவசியமான பொருள் என்று தெரிய வந்தது.

அதே மாதிரியாக இன்றைய தினம் கல்கத்தாவிலிருந்து ஏராளமான குரங்குகள் அமெரிக்காவுக்கு ஏற்றுமதியாகின்றன. குரங்குகளை அமெரிக்கர்கள் அதிகப் பணம்கொடுத்து வாங்குகின்றார்கள் என்றால் ஏதாவது காரணம் இல்லாமலா இருக்கும்? எனவே யோசியாமல் தற்போது அதிகப் பொருள் கிடைக்கின்றது என்று யோசாது இருந்தால் பின்னர் அதுவே அதிக நஷ்டம் அடையக் காரணமாகலாம். ஆகவே சுதந்திர இந்தியாவில் நாம் செய்யும் ஒவ்வொரு காரியத்தையும் நிர ஆலோசித்துச் செய்வதே நலம். இதைக் குரங்கு ஏற்றுமதி செய்வதில் முனைந்திருக்கும் அன்பர்களும், அரசாங்கமும் கவனிக்குமா?

சி. வி. ராமகிருஷ்ணன்.

சென்னை
28—9—48

## தம்பிடி நாணயம் எங்கே?

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு.

யுத்தத்தின் காரணமாகத் தலை காட்டாமல் இருந்த தம்பிடி நாணயம் இன்னும் வெளி வராமல் இருக்கிறது. காரணம் யாதோ? என்னைப் போன்ற ஏழைகள் துணிமணிகளோ அல்லது வேறு வஸ்துக்களோ வாங்கும் போது. விற்பனை வரியும் சேர்த்து ரூபாய் 1-5-7 என்று கடைக்காரர்கள் கூறுகிறார்கள். கையில் தம்பிடி இல்லாத காரணத்தால் இரண்டு தம்பிடி அதிகமாகவே கொடுக்க வேண்டியிருக்கிறது.

கோபாலன்.

நாகபுரி
27—9—48

## இலைச் சாப்பாடு!

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு.

வடநாட்டு பாஷையை அறிந்து கொண்டால் தமிழுக்கு ஆபத்து வந்துவிடும் என்று

கரும் தமிழர்களுக்கு, வடநாட்டுப் பெண்ணான நான் துணிந்து, தமிழிலேயே எழுத வந்ததை மன்னிப்பீர்கள் என்று எண்ணுகிறேன்.

தமிழின் பண்டைப் பெருமையை அறிய ஆவல் கொண்டு, சில வருஷங்களுக்கு முன்பாகத் தமிழைக் கற்க ஆரம்பித்து, அதனுடைய பண்பாட்டையும், உலகத்தில் வேறு எந்த பாஷையிலும் இல்லாத கம்பீரமான சிறப்பையும் பார்த்து என் தாய்மொழியாக இல்லாவிடினும் தமிழையே என்னுடைய ஸ்வீகார பாஷையாகக் கொண்டவள் நான். தமிழ் மொழியின் வளர்ச்சியிலும் அதன் அபிவிருத்தியிலும் சிரத்தைகொண்டவன் தமிழன் என்றால், நானும் ஒரு தமிழனே. இந்தமாதிரி தமிழின் பெருமையை உணர்ந்து அந்த பாஷையின் இனிமையில் மோகித்தவர்கள் வடநாட்டில் நான் ஒருத்தி மட்டுமல்ல. இன்னும் சேர்ப்பவர் இருக்கிறார்கள். இந்த விஷயம் தமிழ் நாட்டினருக்குத் தெரியாது. இதை வெளிப்படுத்தவே நான் இந்தக் கடிதம் எழுதலானேன். நிற்க, தமிழின் சொமாக விளங்கும் தங்கள் பத்திரிகையில் "வட்டமேஜை" என்னும் பகுதியில் வெளியான ஒரு விஷயத்தைப் பற்றி இங்கே கூற விரும்புகிறேன்.

எச்சில் கோப்பையில் அருவருப்புக் கொண்ட நண்பர் ஒருவர், வட இந்தியாவில் எல்லாரும், மண் பாத்திரத்தை உபயோகித்து உடைத்து விடுகிறார்கள் என்று எழுதி இருந்தார். அந்த நண்பர் இதை மதராஸ்—டில்லி ரயில் பாதையில் பார்த்து விட்டு, வட இந்திய வழக்கம் என்று எழுதி விட்டார். குவாலியர் பிரதேசத்தில் மண் கைத்தொழில் ஜாஸ்தியானதால் அங்கே மண் பாத்திரத்திற்கு விலையே இடையாது. அங்கே மாத்திரம் இந்த வழக்கம் உண்டு. மற்றபடி ராஜபுதானா முதலிய இடங்களுக்கு அவர் சென்றிருந்தால் இப்படிச் சொல்லியிருக்க மாட்டார். அங்கே காலையில் எழுந்து இரவு படுக்கும் வரையில் நடக்கும் எல்லாக் காரியமும் ஒரு வெண்கல 'லோட்'டாவில்தான். அதோடு வட இந்தியாவின் எல்லா ஹோட்டல்களிலும் பித்தளைத் தட்டில்தான் சாப்பாடு போடப்படுகிறது. இந்த விஷயத்திற்கு, தமிழர் வழக்கமான வாழை இலைச் சாப்பாடு தான் ரொம்பவும் சுகாதாரமானது.

யாமினீ ரமேஷ்.

மலேயா
27—9—48

## சட்டம் இயற்றலாகாதா?

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு

தென்னிந்தியர் பலருக்கு பர்மாவில் சொத்துக்கள் உள்ளன. அதில் பெரும்பாகம் செட்டியார்களுக்குச் சொந்தமானது. ஒரு சிலர் சொந்தப் பணங் கொண்டும் பெரும்பான்மையினர் செட்டிநாட்டில் பணம் உள்ளவர்களிடம் கடன் வாங்கியும் பர்மாவில் நிலங்கள் வாங்கினார்கள். கடன் கொடுத்தவர்கள் பல வருஷங்களுக்குக் கடனைத் திருப்பக் கேட்கவில்லை. கடன் வாங்கினவர்கள் வட்டியை மட்டும் பர்மாவிலிருந்து வருஷா வருஷம் அனுப்பி வைத்தும் மேலும் அங்கு கிடைக்கும் லாபங்களை அந்த நிலங்களிலேயே மேலும் மேலும் போட்டும் வந்தார்கள்.

ஆனால் யுத்தத்திற்குப் பிறகும் தற்பொழுதும் பர்மாவின் நிலைமை மிகவும் கெட்டு விட்டது. ஆகவே முன்பு பர்மாவில் கடனைத் திரும்பப் பெற்றுக் கொள்வதாக ஒப்புக் கொண்டவர்கள் இப்பொழுது இந்தியாவிலேயே திரும்பித் தரவேண்டுமென்று கேட்டு நடவடிக்கையும் எடுக்கிறார்கள். அதற்கு நமது இந்திய கோர்ட்டுச் சட்டம் இடந்தருகிறது!

இந்த நெருக்கடியான நிலையில் பர்மாவில் உள்ள எங்கள் சொத்துக்கள் அந்தரத்தில் நிற்கிறது போதாதென்று பர்மா கடனையும் இந்தியாவில் கொடுக்க வேண்டுமென்றால் எப்படி முடியும்?

இப்பொழுதைய பர்மா நிலைமையை என்னவென்று சொல்வது? நிலச்சொந்தக்காரர்களுக்கு ஒன்றும் கிடையாது. பர்மியர்கள் எங்களைக் கேளாது எங்கள் நிலங்களில் பயிர் செய்து எங்களுக்கு ஒன்றுந் தராது பூரா வரும்படியும் எடுத்துக் கொள்ளுகிறார்கள். இந்த நிலையில் வரி கையிலிருந்து கட்ட வேண்டியிருக்கிறது. ஆனால் இந்திய சர்க்காரோ அன்னிய நாட்டிற்குப் பணம் அனுப்ப அனுமதிக்கவில்லை. வரி கட்டாவிட்டாலோ உள்ளதும் போய் விடும். பர்மிய சர்க்காரின் சட்டங்களோ இந்தியர்களுக்குப் பாதகமாகவும் நாளுக்கு நாள் கடுமையாகவும் ஆகிக் கொண்டிருக்கின்றன. இப்படிப் பல வகைகளில் எங்களுக்கு நெருக்கடி ஏற்பட்டிருக்கிறது. பர்மாவில் எங்கள் சொத்துக்கள் என்ன கதியடையும் என்பது தெரியவில்லை.

ஆகவே இந்தக் கஷ்டமான நிலைமையில் பாதிக்கப்பட்ட நாங்கள் பர்மா கடனை இந்தியாவில் எப்படிக் கொடுக்க இயலும்?

பர்மா, சைகோன் முதலான நாடுகளில் ஒரு ஒழுங்கான நிலை ஏற்பட்டு, பணம் வரும் வரையிலும் அவை சம்பந்தமான கடன்களுக்கு இந்தியாவில் எந்த நடவடிக்கையும் எடுத்துக் கொள்ள முடியாதபடியும் மேல் கண்ட தேசங்கள் ஒழுங்காகிப் பணம் வரும் காலத்தில் வட்டியில்லாது கடனைச் செலுத்த

## அவளுடைய பொக்கிஷம்!



"அடடா! உன்னுடைய நகைகளை எல்லாம் கழற்றி இரும்புப் பெட்டியில் வைக்கச் சொன்னால், நீ 'கல்கி' இதழ்களைக் கொண்டு போய் வைக்கப் போகிறாயே!"

"உமக்கு என்ன தெரியும்? அவைக்குத் தான் இப்பொழுதெல்லாம் திருட்டு அதிகமாகி யிருக்கிறது."

ளாமே ஏன் நமது இந்திய சர்க்கார் சட்டம் இயற்றலாகாது?

மெய்யப்பன்

திருச்சிராப்பள்ளி
29—9—48

## வைத்திய வசதி

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு,

சாதாரணமாக வைத்திய வசதி இல்லாத ஊர்களிலிருந்து வைத்தியத்துக் கென்று சென்னைக்கு வரும் பாமர மக்கள் அனைவரும் தனி லேடி டாக்டரிடம் உடம்பைக் காண்பித்து மருந்து வாங்கிச் சாப்பிடுவது என்பது முடியாத காரியம். ஏனென்றால் ஒரு தடவை உடம்பைப் பார்த்து மருந்து எழுதிக்கொடுக்க ஐந்து ரூபாய் பீஸ். இதற்காக கோஷா ஆஸ்பத்திரியில் காட்டி மருந்து வாங்கிச் சாப்பிடுவோம் என்று போனால், அப்பப்பா! அங்குள்ள கஷ்டத்தைச் சொல்லி முடியாது. சீட்டு வாங்க ஓரிடம்! உள்ளே போனால் 'அங்கே போ, அங்கே இல்லை. இங்கே போ' என்ற அதிகாரங்கள் வேறு! உடம்பைப் பார்ப்பது ஒருவர்! மருந்து எழுதித் தருவது இன்னொருவர்! மருந்து வாங்கும் ஜன்னலுக்குச் சென்றால் நூறு ஸ்திரீகளுக்கு மேல் அடித்து மோதிக்கொண்டு நிற்கிறார்கள். உட்கார ஒரு பெஞ்சு வசதிகூடக் கிடையாது. எங்கும் ஒரே ஆபாசம். இந்த ஜனக் கூட்டத்தில் கம்பவுண்டர் சரியான மருந்துதான் தருவாரோ அல்லது தண்ணீரைத்தான் கொடுப்பாரோ கடவுளுக்குத்தான் வெளிச்சம்!

கேட்டில் பியூன்கள் படுத்தும் பாட்டை என்னவென்பது? 'நேரமாகி விட்டது. நாளைக்கு வா. டாக்டர் கோவிப்பார்' என்றெல்லாம் கெடுபிடி செய்கிறார்கள். 'இல்லையப்பா, ரொம்ப அவசரம்' என்று கெஞ்சி ஒரு அணா இரண்டு அணா கொடுப்பவர்களை உள்ளே விடுகிறார்கள். இந்தக் கஷ்டங்களிலிருந்து தப்பி உள்ளே போய் டாக்டரைக் கண்டு 'மருந்து எழுதித் தரவேண்டும்' என்று கேட்டால் வேறொரு நாள் குறித்து நம்மை அனுப்பிவிடுகிறார். வெளியூர் வாசிகள் வைத்தியத்துக்காக இந்த ரேஷன் காலத்தில் உறவினர் வீடுகளில் எத்தனை நாள் தான் தங்க முடியும்? நம்முடைய ஊரில் வைத்திய வசதி இல்லையே, பட்டணத்தில் பிரபல ஆஸ்பத்திரி இருக்கிறதே என்று அங்கு போனால் இவ்வளவு கஷ்டங்கள் இருக்கின்றன. இதைக் கவனிக்க ஆஸ்பத்திரி அதிகாரிகளும் சர்க்காரும் முன்வருவார்களா?

வி. கல்யாணி.

சாத்தூர்
3—10—48

## சினிமாவில் மதுவிலக்கு?

"கல்கி" ஆசிரியர் அவர்களுக்கு,

அண்ணல் அறிவிச்சாமூர்த்தி அவதரித்த அக்டோபரில் அழிந்தான் மதுவரக்கன். ஆனால் அவன் நாளுக மடியவில்லை என்பதை நாம் மறக்கக் கூடாது. அரசாங்கம்தான் அழித்தது. இயற்கை மரணம் எய்தாத மனிதனின் ஆவி சுற்றும் என்பது நம் நாட்டு மரபு. அதுபோலவே மதுவரக்கனின் ஆவி சிலகாலம் சுற்றும். இதைத் தடுக்க பல உத்தியோகஸ்தர்களை நியமித்தாலும் சமாளிப்பது சிறிது கஷ்டம். சர்க்காருடன் பொது ஜனங்களும் ஒத்துழைக்க வேண்டும்.

சினிமாவில் காட்டப்படும் மதுபானக் காட்சிகளால் மதுவை மறக்க முயலும் மனிதனுடைய மனதில் குடியின் நினைவு இருந்து கொண்டே இருக்கும்.

ஆகவே புதுப்படங்களில் மட்டுமின்றிப் பழைய படங்களிலும் கூட மதுபானக் காட்சியை மறைக்க வேண்டும். தற்சமயம் கிராமங்களிலும் சினிமாக் காட்சிகள் அதிகம் நடைபெறுகின்றன. ஆனால் அங்கு புதிய படங்கள் அதிகம் காட்டப் படுவதில்லை. பழைய படங்கள்தான் அதிகம் காட்டப்படுகின்றன என்பதை நினைவு கூர்ந்து சர்க்கார் ஆவன செய்ய வேண்டும்.

எம். சிவகாமிநாதன்

குளித்தலை
1—10—48

## கொடிக்கு மரியாதை

'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு,

இரண்டு தினங்களுக்கு முன் வெளிவந்த பத்திரிகைகளில், சினிமா தியேட்டர்களில் காட்சி முடியும் தருணத்தில், நம் யூனியன் கொடியாகிய தேசியக் கொடியைக் காண்பிக்க வேண்டுமென்றும், அதற்கு மரியாதை செய்யும் வகையில் ஜனங்களை எழுந்து நிற்கச் செய்ய வேண்டும் என்றும் கண்டிருந்தது. தேசியக் கொடிக்கு மரியாதை செலுத்த வேண்டியது நமது முக்கிய கடமையாகும்.

ஆனால் மக்கள் தேசியக் கொடியை எவ்வாறு உபயோகிக்க வேண்டும்? துவஜஸ்தம்பத்தில் கொடியை ஏற்றும் விதம் எப்படி? அதற்குக் கொடுக்க வேண்டிய முக்கியத்துவம் என்ன என்பதை யெல்லாம் சரிவர அறிந்து கொள்ளாதிருக்கும் இக்காலத்தில் சர்க்காரின் இந்த அறிக்கை பிரயோஜனமாயிருக்கும் என்று தோன்றவில்லை. ஆகையினால் சர்க்கார் தேசியக் கொடியை உபயோகிக்கும் விதம் அதற்குக் கொடுக்க வேண்டிய முக்கியத்துவம் இவைகளைப் பொதுமக்கள் புரிந்து கொள்ளும் விதத்தில் விளக்கி, அதை ஒரு செய்திக் கரு (News Reels) வாக எடுத்து வினியோகிக்க வேண்டும். அத்துடன் அதை ஒவ்வொரு தியேட்டர், கொட்டகை முதலாளிகளும் விலைக்கு வாங்கித் தங்கள் கொட்டகையில் ஒவ்வொரு காட்சியிலும் காட்ட வேண்டும் என்றும் உத்தரவு கொடுக்க வேண்டும். இவ்வாறு செய்தால்தான் பொது ஜனங்களுக்கு நம் தேசக் கொடிக்கு மரியாதை கொடுக்க வேண்டும் என்ற எண்ணம் ஏற்பட ஏதுவாகும். ஆகையினால் இந்த ஏற்பாட்டை சர்க்கார் ஏற்று நடத்துவார்களா?

பி. கணேசன்.



• இந்த இதழில் வெளியாகி யிருக்கும் கடிதங்களில் தியாகராயநகர் க. திருவேங்கடாச்சாரி அவர்கள் எழுதி யிருக்கும் கடிதத்துக்கு ரூ. 25 பரிசளிக்கப்பட்டது.

# ஸாரிடோன்

**Saridon**

எல்லா
வலிகளையும்
போக்குகிறது

ரூ. 22/8 பெறுமானமுள்ள கை கெடிகாரம் இனம்

“பூஜா” விழாவையொட்டி 15 தினங்களுக்கு மாத்திரம் இச்சலுகை!

முதன் முதலாக இப்போது தான் மேற்கண்ட கெடிகாரங்களை பத்து வருடத்திற்கு முன்பிருந்த விலைக்கே விற்பனை செய்கிறோம். எல்லா கெடிகாரங்களும் கண்ணாடிகளை கவர்ந்த வேலைப்பாடுடையதும். பின்ஸ்டிக் பாண்டுடன் வெல்வெட் கேஸில் அனுப்பப்படுகின்றது. மூன்று வருஷ உத்தரவாதம்.



நெ. 122 நீண்ட சதுர வடிவம்

| | | | | |
|---|---|---|---|---|
| 5 ஜூவெல்ஸ் | குரோமியம் | 32/- | ரோல்டுகோல்டு | 38/- |
| 7 ,, | ,, உயர்ந்தது | 44/- | ,, | 55/- |
| 15 ,, | ,, | 58/- | ,, | 72/- |



நெ. 121 (டோனு)

| | | | | |
|---|---|---|---|---|
| 5 ஜூவெல்ஸ் | குரோமியம் | 37/- | ரோல்டுகோல்டு | 44/- |
| 7 ,, | ,, உயர்ந்தது | 46/- | ,, | 58/- |
| 15 ,, | ,, | 60/- | ,, | 75/- |



நெ. 123 நட்டை வடிவம் 4 ஜூவெல்ஸ் 28/-

| | | | | |
|---|---|---|---|---|
| 7 ஜூவெல்ஸ் | குரோமியம் | 35/- | ரோல்டுகோல்டு | 48/- |
| 15 ,, | ,, | 37/- | ,, | 60/- |



நெ. 124 (சைஸ் 13)

| | | | |
|---|---|---|---|
| குரோமியம் கேஸ் | 18/8/ | ரேடியம் | 20/- |
| சென்டர் செகண்ட் | 22/8/ | ,, | 21/- |

அலாரம் டைம் பீஸ் 16/- சற்று உயர்ந்தது 20/- மிகவும் உயர்ந்தது 25/-

பாக்கிங், தபால் செலவு அணா 12 பிரத்தியேகம். சேர்ந்தாற்போல் மூன்று கெடிகாரங்களுக்கு ஆர்டர் செய்தால் 22/8/- பெறுமானமுள்ள கடிகாரம் ஒன்று இலவசமாக அனுப்பப்படும்.

**H. DAVID CO, Post Box No. 11424, CALCUTTA**



# இந்த ஸோப் உங்கள் அஜீரணத்தைக் குணப்படுத்தாது!



காந்தி ஸோப் உங்கள் சருமத்தை வழவழப்பான வெல்வெட்டாக மாற்றி விடு மென்றாவது, காதலுக்குக் காரணமாகு மென்றாவது நாங்கள் உறுதி மொழி கூற வில்லை. இவ்வித குணங்கள் உண்டென்று சொல்லிக் கொண்டோமானால் அடுத்த படியாக காந்தி ஸோப் அஜீரணத்தைப் போக்க வல்லது என்று கூடச் சொல்ல வேண்டியிருக்கும்.

ஆனால் காந்தி ஸோப்

- ஓர் உயர்தர ஸ்நான ஸோப் என்றும்
- அது அழுக்கை நன்றாகப்போக்கடிக்கும் என்றும்
- அது மிருதுவான சருமத்துக்கும் எரிச்சலையாவது கெடுதலையாவது உண்டாக்காது என்றும்
- திருப்தி அடையும்படியான அளவுள்ள வாசனை யுடையதென்றும் உறுதியாய் சொல்லுவோம். நீங்கள் இதை உபயோகிக்க பிரயத்னப்படு கிறீர்களா?

இதர உயர்தர ஸ்வஸ்திக் தயாரிப்புகள் சீகைக்காய் சோப், பரிமள ஆமணக்கெண்ணை, ஸ்வஸ்திக் கதர ஸோப், சலவை ஸோப்புகள் கோவாலின் மார்க் வனஸ்பதி முதலியன.



## காந்தி ஸோப்

SHILPI

Son. 13 — Tamil

ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிமிடெட் பம்பாய்.

மதராஸ் ஸேல்ஸ் டிப்போ: No. 14, G. ஸ்டிரிங்கர் தெரு, (ஸேவன் ஸ்கொயர்) மதராஸ்.
பெங்களூர் ஸேல்ஸ் டிப்போ: ஆற்காடு ஸ்ரீனிவாஸாச்சார் தெரு, பெங்களூர் ஸிட்டி.
கொச்சின் ஸேல்ஸ் டிப்போ: பஜார் ரோடு, மட்டாஞ்சேரி, கொச்சின்

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras

# கல்கி



KALKI அக்டோபர் 17, 1948 4 அணா

# தீபாவளிக்கு விசேஷ மலிவு விற்பனை

அலங்கார ஆடைகள்!   ஆயிரம் ரகங்கள்!!

## பட்டுச் சேலைகள் - 2000 டிசைன்கள்

**விலை ரூ. 15 முதல் 750 வரை**

மைசூர், பெங்களூர், கொள்ளேகாலம், ஆரணி, காஞ்சீபுரம் பட்டுச் சேலைகள், பெங்கால் சில்க் சேலைகள், மைசூர் கிரேப், ஜார்ஜெட், டிஷ்யூ சில்க் சேலைகள், வோல், ஜுங்னா, டார்பான், ஜரிகை சேலைகள் முதலியவை. கண்கவர் கலர்களில் அழகிய முந்திகள், அற்புதமான பார்டர்களுடன், தீபாவளிக்கு ஸ்பெஷலாக 5 முதல் 10 கஜங்களில், தயார் செய்து மலிந்த விலையில் ஏராளமாக கொண்டுவந்து குவித்துள்ளோம்.

## நூல் சேலைகள் - 3000 டிசைன்கள்

**விலை ரூ. 5 முதல் 60 வரை**

தீபாவளிக்காக கோயமுத்தூர், உறையூர், மதுரை, சேலம், ஜம்மலமடுகு, புல்லம்பேட், தென்காசி, காஞ்சீபுரம், ஆரணி, நூல் சேலைகள் 100 நெ. 80 நெ. 60 நெ. நூல்களில் சாயத்துக்கு உத்திரவாதத்துடன், திறமைவாய்ந்த நெசவாளர்களால் ஸ்பெஷலாக 5 முதல் 10 கஜங்களில் நெசவு செய்து கொண்டுவந்து குவித்துள்ளோம்.

## பட்டு, நூல் வேஷ்டிகள், அங்கவஸ்திரங்கள் - 1000 டிசைன்கள்

**விலை ரூ. 2 முதல் 100 வரை**

வெண்பட்டு வேஷ்டிகள், பட்டு அங்கவஸ்திரங்கள், 100 நெ. துகிலி, மதுரை, சேலம், நாராயணவரம், நகரி வேஷ்டிகள், அங்கவஸ்திரங்கள், டவல்கள் நவீன டிசைன்களில் கொண்டு வந்து குவித்துள்ளோம்.

## மில் ஜவுளிகள் - பல நூறு டிசைன்கள்

கட்டாவ் வாயில்கள், சீட்டிகள், பின்லே வேஷ்டிகள், உயர்தர மல்கள் நவீன டிஸைன்களில் கோட்டிங், ஷர்டிங் டுவில்கள், டவல்கள் இன்னும் பல ரகங்கள். தீபாவளியை முன்னிட்டு எல்லா விலைகளும் குறைக்கப்பட்டிருக்கின்றன.

**மலிந்த விலைகள் — கறார் விலை**

# கஸ்தூரிபாய் கம்பெனி

**உயர்தர பட்டு நூல் ஜவுளி வியாபாரிகள்**

**மேல வீதி :: சிதம்பரம்**

No. 1.

REGD. NO. M. 4392

# ராதா ஸில்க் எம்போரியம்

மயிலாப்பூர் [போன்: 84188] மதராஸ்

## தீபாவளி விசேஷ விற்பனை!

வழக்கம்போல் இதுவரை தங்களுக்குத் திருப்திகரமாக தீபாவளிப் பட்டுச் சேலைகள் தயார் செய்து அளித்ததுபோல் இந்த தீபாவளிக்கும் மிக உயர்ந்த வேலைப்பாடுகள் கூடிய அசல் கொள்ளேகாலம் பட்டுச் சேலைகள் தயார் செய்து தருவித்துள்ளோம். இன்றே விஜயம் செய்து தங்களுக்குத் தேவையானதை பொறுக்கி எடுத்துச் செல்லக் கேட்டுக் கொள்கிறோம்.



**தீபாவளி பண்டிகையை உத்தேசித்து பம்பாயில்** கீழ்க்கண்ட விலாசத்தில் எங்களது பிராஞ்சு ஒன்றை ஏற்படுத்தியுள்ளோம்

**நெ. 2, விஸ்ராணி பவன்**

**திலாங் ரோடு, மாதுங்கா, பம்பாய்-19**



பிராஞ்சு

# ருக்மணி ஸில்க் எம்போரியம்

48/49, பெரிய தெரு :: கும்பகோணம்



புரொப்ரைட்டர்கள்

R. K. ராதாகிருஷ்ண செட்டியார் & பிரதர்